# சீதா கல்யாணம்



'கலைமணி'

தொ. மு. பாஸ்கரத்தொண்டைமான்

SEETHA KALYANAM

by

T. M. Baskara Thondaiman



First Edition: Karaikudi Kamban Kazhagam
Second Edition: August 2005

Rs. 20

Pages: 80

*Published by*

**NIVETHITHA PATHIPPAGAM**
No 1, 3rd Floor,
Pudhur 13th Street, Ashok Nagar,
Chennai - 600 083.

Typeset by
STAR GRAPHICS, Chennai - 17.

Wrapper Designed by
Classic Designs, Chennai - 17.

Printed at
S.K.B. Printers
Chennai - 600 015.

# பதிப்புரை

இது கம்பன் கழகத்தின் வெளியீடு. பேராசிரியர் திரு. ராபி. சேதுப்பிள்ளையவர்களின் ஆலோசனையின் பேரில் திரு.பாஸ்கரத் தொண்டைமான் அவர்களை, இந்த நூலை எழுதியுதவும்படி வேண்டிக்கொண்டோம். அவர்கள் உடனே இசைந்து தமத அரசாங்க உத்தியோக வேலைகளுக்கிடையே, சிரமம் பாராட்டாது இதனை முடித்துக் கொடுத்தார்கள். அன்னாருக்கு எமது வந்தனத்தைத் தெரிவித்துக் கொள்கிறோம்.

இந்த நூலில் கவிச்சக்கரவர்த்தி கம்பனுடைய நூறு பாடல்கள் கொடுக்கப்பட்டிருக்கின்றன. சொற்களின் சந்தி பிரிக்கப்பட்டிருப்பதால், இளைஞர் யாவரும் கவிகளின் பொருளை எளிதில் புரிந்து கொள்ளக்கூடும்.

ஒவ்வொறு குடும்பத்திலும் குழந்தைகள் சம்பந்தப்பட்ட விசேடங்கள் நடைபெறும் போது, இத்கைய நூல்களை அச்சிட்டோ, வாங்கியோ, சிறுவர் சிறுமியருக்குப் பரிசளிப்பது மிகவும் பொருத்தமாயிருக்கும் என்று அன்பர்களுக்குச் சொல்லிக் கொள்ள விரும்புகிறோம்.

கம்பன் புகழ் வாழ்க ! கன்னித் தமிழ் வாழ்க !

**சா. கணேசன்**

செயலாளர்
கம்பன் கழகம்,
காரைக்குடி.

# முன்னுரை

'ஒரு காவியத்தைப் பற்றி குழந்தைகளிடம் பிரசங்கம் செய்யாதே. காவியத்தையே குழந்தைகளின் கையில் கொடுத்து விடு' என்று அனடோல் பிரான்ஸ் என்ற அறிஞர் சொல்லுகிறார். இது எவ்வளவு சரியான யோசனை! இந்த ஆலோசனையின்படி நடக்க விரும்பியே, 'சீதா கல்யாணம்' எழுதப்பட்டுள்ளது. காவியத்தைப் பற்றியா வது, கம்பனது கவிதையைப் பற்றியாவது விரிவான விமரிசனம் எழுதுவது நோக்கமில்லை. அது அவசியமும் இல்லை. தமிழ் நாட்டுச் சிறுவர் சிறுமியர் அனைவரும், கம்பன் யார். அவன் எழுதிய காவியம் எப்படிப்பட்டது என்பதைத் தாமே தெரிந்து கொள்ளக் கூடிய முறையில் இதை எழுதி முடிக்க எண்ணினேன். இந்த முயற்சி எவ்வளவு தூரம் பயன் அளித்திருக்கிறது என்பதை இனித்தான் தெரிந்து கொள்ள வேண்டும்.

கம்ப ராமாயணம் பால காண்டத்தில் மொத்தம் ஆயிரத்து நானூறு பாடல்கள் இருக்கின்றன. அவைகளில் நூறு பாடல்களே இந்தப் புத்தகத்தில் தொகுக்கப்பட்டி ருக்கின்றன. கதைத் தொடர்ச்சியையும் இளைஞர் தெரிந்து கொள்ள, இடையிடையே வசனப் பகுதியும் சேர்க்கப் பட்டிருக்கிறது. இந்நூல் எழுதுவதற்கு என்னைத் தூண்டியவர் காரைக்குடி கம்பன் கழகத்தின் செயலாளரான நண்பர் ஸ்ரீ. சா. கணேசன். அவர்களுடைய தூண்டுதல் இல்லாவிட்டால், தகுதி ஒரு சிறிதும் இல்லாத நான் இந்த முயற்சியில் தலையிட்டிருப்பேனா என்பது சந்தேகம்தான். அவர்களுக்கும், இத்தகைய பணியில் இடைவிடாது என்னைத் தூண்டிவரும் அருங்குணச் செல்வரும் கம்பன் கழகப் பொக்கிஷதாருமான நண்பர் ஸ்ரீ நா. சிதம்பரம் அவர்களுக்கும் என் நன்றி உரியதாகும்.

**- தொ.மு.பாஸ்கரன்**

# இரண்டாம் பதிப்பின் முன்னுரை

காரைக்குடி கம்பன் கழகத்தின் முதல் வெளியீடு என்ற பெருமைகுரியது "சீதா கல்யாணம்'' என்ற இந்த நூல். கம்ப ராமாயணத்தின் பால காண்டத்திலிருந்து, நூறு பாடல்களைத் தேர்ந்தெடுத்து,அதற்கான விளக்கங்களுடன் சிறுவர் சிறுமியர்களுக்கு, கம்பனை அறிமுகப்படுத்த வேண்டும் என்ற சீரிய நோக்கத்துடன், கம்பன் அடிப்பொடி சா. கணேசன் அவர்களால் மேற்கொள்ளப்பட்ட முதல் முயற்சி. கம்பன் அடிப் பொடியின் உருவல் நண்பரான பாஸ்கரத் தொண்டைமானிடம், அந்தப் பணியை ஒப்படைத்தார். அவரும் அதைச்செய்து முடித்தார். நல்ல வரவேற்பு இருந்ததால், அடுத்து அயோத்தியா காண்டத்தையும் "பாதுகா பட்டாபிஷேகம் என்ற தலைப்பில் கம்பன் கழகம் வெளியிட்டு மகிழ்ந்தது. அடுத்து ஆரண்யகாண்டம் 'மாயமான்' என்ற தலைப்பில் எழுதப்பட்டது. தொண்டைமானவர்கள் அலுவல் நிமித்தம் வெளியூர்களுக்கும் சென்று விட்டதால், தொடர்ந்து எழுத முடியாமல் போயிருக்கலாம். அப்போது நான் சிறுமியாக இருந்ததால், சீதா கல்யாணத்தையும், பாதுகா பட்டாபிஷேகத்தையும் எனக்கு படித்துக் காட்டி, "உனக்கு விளங்குகிறதா?'' என்று கேட்டது நினைவிருக்கிறது. எனக்கு விளங்கினால், மற்ற குழந்தைகளுக்கும் விளங்கக் கூடும் என்று எண்ணியிருக்கலாம். அந்த நாட்களில் யார் வீட்டிலாவது திருமணம் என்றால், திருமணப் பரிசாக, சீதாகல்யாணத்தையும், கவிமணி தேசிகவிநாயகம் பிள்ளையின் 'மலரும் மாலையும்' என்ற கவிதையும் தந்தையார் பரிசாகக் கொடுப்பது வழக்கம். நானும் அதையே தொடர்ந்து கடைப்பிடித்தேன். பின்னர் நூல்கள் கைவசம் இல்லாமையால் அந்தப் பழக்கம் விடுபட்டுப் போய்விட்டது. இனி தொடரலாம் என்ற நம்பிக்கை ஏற்பட்டிருக்கிறது, ''சீதா கல்யாணம்''நீண்ட இடைவெளிக்குப் பிறகு இரண்டாம் பதிப்பாக வந்திருக்கின்ற காரணத்தால், இந்த நூலை ஆர்வத்துடன், அழகாக அச்சிட்டுக் கொணர்ந்துள்ள நிவேதிதா பதிப்பகத்தாருக்கு நன்றி கூறக் கடமைப்பட்டிருக்கிறேன்.

**- ராஜேஸ்வரி நடராஜன்**

# பொருளடக்கம்


| | | |
|---|---|---|
| | கண்ப ராமாயணம் | 7 |
| | இராமாயணக் கதை | 12 |
| 1. | கடவுள் வணக்கம் | 18 |
| 2. | அவையடக்கம் | 19 |
| 3. | சரயு நதி | 21 |
| 4. | கோசல நாடு | 23 |
| 5. | அயோத்தி நகரம் | 26 |
| 6. | தசரதனது அரசியல் | 28 |
| 7. | இரமனது அவதாரம் | 30 |
| 8. | இராம இலக்குமண விஸ்வாமித்திரர் அடைக்கலமாகப் பெறுதல் | 31 |
| 9. | தாடகை வதம் | 35 |
| 10. | இராம இலக்குவர் விஸ்வாமித்திரர் - வேள்வி காத்தல் | 39 |
| 11. | அகலிகை சாப விமோசனம் | 41 |
| 12. | மிதிலையை இராம இலக்குணர் காணல் | 43 |
| 13. | விஸ்வாமித்திரர் இராமனது குலமரபு கூறுதல் | 55 |
| 14. | இராமன் வில்லொடித்தது | 58 |
| 15. | தசரதன் பரிவாரங்களுடன் மிதிலைக்குப் புறப்படுதல் | 66 |
| 16. | இராமன் உலா வருதல் | 72 |
| 17. | சீதைக்கு அலங்காரம் செய்தல் | 75 |
| 18. | சீதா கல்யாணம் | 78 |

# கம்ப ராமாயணம்

*மனிதனுக்குப் பொதுவாக வாழ்க்கையிலே இன்பம் தருவது எது என்று கேட்டால், உயர்ந்த காவியங் களைப் படித்து, அக்காவியங்களிலுள்ள கவிச் சுவையை அனுபவிப்பதுதான் என்று லேசாகச் சொல்லிவிடலாம். ஆத்ம அனுபவத்துக்கு அடுத்த படியாகக் கவிதை அனு பவம்தான் மனிதனுக்கு ஆனந்தம் தரக்கூடியது. தமிழன் இத்தகைய கவிதை அனுபவம் பெற வேண்டுமானால், அவன் அதை யாரிடம் எதிர்பார்க்கலாம்? கம்பனிடம்தான் எதிர் பார்க்க முடியுமேயொழிய வேறு புலவர்களிடம் எதிர்பார்க்க முடியாது.*

இம்பர் நாட்டில் செல்வம் எலாம்
  எய்தி அரசாண்டு இருந்தாலும்,
உம்பர் நாட்டில் கற்பகக் கா
  ஓங்கும் நிழல் இருந்தாலும்,
செம்பொன் மேரு அனைய புயம்
  திறல் சேர் இராமன் திருக் கதையில்
கம்பநாடன் கவிதையில் போல்
  கற்றோர்க்கு இதயம் களியாதே!

*என்றெல்லாம் தெரியாமலா பாடி வைத்தார்கள்!*

'கல்வியில் பெரியவன் கம்பன்', 'கவிச் சக்கரவர்த்தி கம்பன்' என்றெல்லாம் நமது முன்னோர்கள் அவனைப் போற்றி உரைத்திருக்கிறார்கள். ஆனாலும், கம்பன் யார் என்று நாமெல்லோரும் தெரிந்து கொண்டோமா என்றால், இல்லை என்றுதான் சொல்ல வேண்டும். காரணம், சாதி மத பேதங்களால் பிளவுண்டு கிடக்கும் தமிழர்களிடையே அவன் பிறந்து விட்டான். அவனுடைய கவியை மட்டும் படித்துப் படித்துச் சுவைக்கிறவர்கள், அவன் ஓர் உலக மகாகவி, சாதி சமயம் முதலிய வேறுபாடுகளுக்கு எல்லாம் அப்பாற்பட்டவன், ஒரு பெரிய மேதாவி, ஏதோ தமிழர் பெற்ற அதிருஷ்டம்தான் அவன் தமிழனாய்ப் பிறந்தான், தமிழிலே இக்கவிதைக் களஞ்சியத்தை எழுதி உதவினான் என்று கண்டு கொள்ளலாம். 'பூர்வீக கிரேக்கருக்கு ஹோமர் எப்படியோ, ரோமருக்கு வர்ஜில் எப்படியோ, இத்தாலியருக்கு தாந்தே எப்படியோ, வடமொழியாளருக்கு வால்மீகி எப்படியோ, அப்படியே தமிழருக்கும் தமிழுக்கும் கம்பன் பெருமை கொடுக்கிறான்.

கம்பனது சரித்திரம் ஒன்றும் திட்டமாக நமக்குக் கிடைக்கவில்லை. அவன் திருவழுந்தூரில் இன்றைக்கு சுமார் ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்னர் பிறந்தவன் என்றும், வெண்ணெய் நல்லூர் சடையப்ப வள்ள லாரது ஆதரவில் வளர்ந்து, அவர் விரும்பியபடியே இந்த ராமாயணத்தைப் பாடி முடித்தான் என்றும் தெரிகிறது. இத்தகைய ஒரு பெரிய காவியம் எழுது வதற்கு அவனுக்குக் கலைமகளது பரிபூரணமான அருளும், சடையப்பரது கருணையால் கிடைத்த

இலக்கிய அறிவும் பெரிதும் துணை நின்றிருக்கின்றன. கம்பனைப் பற்றி நாம் இவ்வளவு தெரிந்து கொண்டால் போதும்.

இராம கதை வடமொழிப் புலவரான வால்மீக முனிவரால் உலகுக்குக் கொடுக்கப்பட்ட ஒரு பொக்கிஷம். அக்கதை, மக்கள் வாழ்க்கையைப் பண்படுத்த ஒரு நல்ல சாதனம் என்று கண்ட கம்பன், அதைத் தமிழில் விருத்தப் பாவிலே ஆக்கிக் கொடுத்திருக்கிறான். கம்பன் தனது இராம கதையில் வால்மீகியை மிகவும் நெருக்கமாகவே பின்பற்றியிருக்கிறான் என்றாலும், இந்தக் கம்பராமாயணம் வால்மீகி ராமாயணத்தின் மொழி பெயர்ப்பு என்று சொல்ல முடியாது.'கதை சொல்லும் ரீதியும், வாக்கின் நடையும், வர்ணனைகளும் அலங்காரங்களும், மனித உள்ளத்தின் உணர்ச்சிகளை எடுத்துச் சொல்லும் மாதிரியும் எல்லாம் கம்பனுடையதே.' கதையை மட்டும் வால்மீகியிடமிருந்து பெற்றுக்கொண்டு, அவன் ஒரு தனிக் காவியமாகவே செய்திருக்கிறான் என்று தான் சொல்ல வேண்டும்.

கம்பனுடைய கவிகள் எல்லாம் திராக்ஷாபாகமாகவே அமைந்திருக்கின்றன. கம்பன் பாட்டுக்கள் என்றாலே அதற்கு ஒரு தனி நடை இருக்கும். ஓர் இனிமையும், ஓர் எளிமையும் இருக்கும். இன்று நம்மிடையே உலவிவரும் கம்ப ராமாயணம் என்ற புத்தகத்தில் பல பாட்டுக்கள் இடைச் செருகல்கள் என்று அறிஞர்கள் கூறுகிறார்கள். அந்த இடைச் செருகல்களையெல்லாம் ஒதுக்கித் தள்ளிவிட்டு, கம்பன் பாட்டுக்கள் என்று சொல்லக்கூடிய

பாட்டுக்களை மட்டும் படித்தால், நமக்கு ஒரு தனி ஆனந்தமே உண்டாகும். கம்பன் கவி ஒவ்வொன்றிலும் இருக்கிறது அவன் முத்திரை.

'கம்பனுடைய கவிதையைப் பற்றி ஒரே வார்த்தை யில் வர்ணிக்க வேண்டுமானால் அதன் சிறந்த குணம் காம்பீர்யம் என்று சொல்லலாம். கம்பன் சிருங் காரத்தை அழகாகச் சொல்லுகிறான் என்பதில் தடை யில்லை. சோகம் சொல்லும் இடங்களில் எல்லாம் நம்முடைய கண்களில் நின்றும் தாரை தாரையாகக் கண்ணீர் பெருகும்படி செய்து விடுகிறான். ஆனால் அவன் வீரத்தையும், வியப்பையும், ரௌத்திரத்தையும் தன் சொந்தமாக்கிக் கொண்டு விட்டான். இவ்வளவு ரஸபாவங்களையெல்லாம் தன் காவியத்தில் அமைத்து அதை ஒரு பெரிய நாடக அரங்கமாகவே ஆக்கிவிடு கிறான். அவன் அந்த அரங்கத்தில் நடத்தும் பாத் திரங்கள் எல்லாம் உயிர் ஓவியங்களாக நமக்குக் காட்சி அளிக்கிறார்கள். 'கம்பன் என்ற பெயரைக் கேட்ட அளவிலே தமிழ்க் கவிதா மண்டலத்தின் மகோன்னத மான உச்சியும், கற்பனை உலகத்தின் விரிவும் சக்தியும், தமிழ்நாட்டின் கலைவாழ்வின் வளமும் சுவையும், எல்லாம் ஒரு நாடக அரங்கத்திலே தோன்றுவது போலத் தென்படுகின்றன.'

இத்தகைய ஓர் அருமையான நூலைத்தான் உங்கள் கையில் நான் கொடுக்க விரும்புகிறேன். நூல் அளவில் பெரியது; ஆதலால் அதில் சிறந்த கவிச்சுவை நிறைந்த பாடல்களை மட்டும் பொறுக்கியெடுத்துக் கொடுக்க உத்தேசம். இப்போது பால காண்டத்தில் நூறு

பாட்டுக்கள் உங்களுக்குக் கொடுக்கப்படுகின்றன. ஆற அமர இருந்து படித்துச் சுவைத்துப் பாருங்கள். கம்பன் பெருமையை நீங்கள் தெரிந்து கொள்வீர்கள். கம்பன் புகழ் பாடிக் கன்னித் தமிழ் வளர்ப்பதில் நீங்களும் பங்கு பெற்று மகிழ்வீர்கள்.

# இராமாயணக் கதை

பால காண்டம்:

பல ஆயிரம் வருஷங்களுக்கு முன்னால், வட இந்தியாவிலே கோசல நாட்டைத் தசரதன் என்னும் சக்கரவர்த்தி ஆண்டு வந்தான். அவனுடைய ராஜதானிப்பட்டணம் அயோத்தி. அவனுக்கு மனைவிமார் மூன்று பேர். அவர்கள் கோசலை, கைகேயி, சுமித்திரை எனப்படுவார்கள். வெகுகாலம் வரை தசரதன் புத்திரப் பேறு இல்லாதிருந்தான். அவன் புத்திர காமேஷ்டி யாகம் செய்ததின் பலனாக, கோசலையிடத்தில் இராமனும், கைகேயினிடத்தில் பரதனும், சுமித்திரையிடத்தில் இலக்குமணனும் சத்ருக்கனனும் பிறந்தார்கள். குழந்தைகள் நால்வரும் நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமு மாகவே வளர்ந்து வந்தனர். தக்க பிராயம் வந்ததும், அவர்கள் வில்வித்தை, வாள் பயிற்சி, யானையேற்றம், குதிரை யேற்றம் முதலியன பயின்றார்கள். இளங்குமரர் நால்வரிலும் இராமனே குணத்திலும் பராக்கிரமத் திலும் சிறந்து விளங்கினான்.

விசுவாமித்திரர் ஒரு மகரிஷி. இவர் ஒரு பெரிய யாகம் செய்தார். இவருடைய யாகத்தை அரக்கர்கள் கெடுத்து வந்தனர். ஆகையால், இவர் தசரதனிடம்

சென்று, அந்த அரக்கர்களை அழிக்க இராமனைத் தம்முடன் காட்டிற்கு அனுப்பும்படி கேட்டார். இராமனை அனுப்பத் தசரதன் மிகவும் கஷ்டப் பட்டான்.

ஆயினும் தனது குலகுருவாகிய வசிஷ்டர் சொன்ன தின் பேரில் அவன் இராமனை விசுவாமித்திரருடன் அனுப்பி வைத்தான். இராமனை விட்டு என்றும் பிரியாத இலக்கு மணனும் கூடச் சென்றான். இராமன், விசுவாமித்திரரின் யாகத்தைக் கெடுக்க வந்த தாடகை, சுவாகு முதலியோரைக் கொன்று, அந்த யாகத்தை நிறைவேற்றி வைத்தான். அப்பால் விசுவாமித்திரர் இராம, லக்குமணர்களை அழைத்துக் கொண்டு மிதிலைக்குச் சென்றார். போகிற வழியில் கல்லாயிருந்த அகலிகை, இராமனது பாதம் பட்டதால் சாப விமோசனம் அடைந்து, கல்லுருவம் நீங்கித் தன் சுய உருவம் அடைந்தாள். மிதிலையில் இருந்து அரசாண்டு வந்த சனகனிடம் மிகவும் பலமுடையதான வில் ஒன்றிருந்தது. அந்தவில்லை வளைத்து நாண் ஏற்று பவருக்கே தன் மகள் சீதையை மணம் செய்து கொடுப்பதாய் அறிவித்திருந்தான் சனகன். பல அரசர்கள் வந்து அந்த வில்லை வளைக்க முயன்று முடிவில் தோல்வியடைந்தார்கள்; அது ஒடிந்தது. சனகன் சந்தோஷ மடைந்து சீதையை இராமனுக்கு மணம் செய்து கொடுத்தான். சீதையுடன் இராமன் அயோத்திக்குத் திரும்பினான். வருகிற வழியில் பரசுராமனது கர்வத்தையும் அடக்கி அவனையும் பங்கப்படுத்தினான்.

அயோத்தியா காண்டம்:

சில வருஷங்கள் சென்றன. தசரதனுக்கோ முதுமைப் பருவம் வந்தது. தன் சீமந்த புத்திரனான இராமனிடம் ராஜ்யத்தை ஒப்படைத்துவிட்டு தான் காட்டில் சென்று தவம் செய்ய விரும்பினான். இராமன் முடிசூடப்போகிறான் என்பதை அறிந்த நகர மக்கள் எல்லோரும் சந்தோஷப்பட்டார்கள். அயோத்தி நகரமும் அற்புதமாக அலங்கரிக்கப்பட்டது. இந்தச் சமயத்தில், கிழக்கூனியான மந்தரையின் சூழ்ச்சியால், கைகேயி தசரதனிடம் தான் முன்னர் பெற்றிருந்த இரண்டு வரங்களைப் பெறுகின்றாள். பரதனுக்குப் பட்டாபிஷேகம் செய்ய வேண்டுமென்பது ஒரு வரம்; இராமனைப் பதினான்கு வருஷம் காட்டிற்கு அனுப்ப வேண்டுமென்பது மற்றொரு வரம். இதைக் கேட்ட தசரதன் மனம் உடைந்து வருந்தினான். தந்தை சொல் காப்பது தன் கடன் என்று உணர்ந்த இராமன் காட்டிற்குப் புறப்பட்டான். இலக்குமணனும் சீதையும் உடன் சென்றார்கள். நகர மாந்தர்பட்ட துயருக்கோ அளவில்லை. தசரதனோ, புத்திர சோகத்தால் மாண்டான்.

அயோத்தியில் இத்தகைய சம்பவம் நடக்கும் போது கேகய நாட்டிலுள்ள தன் மாமன் வீட்டிற்குச் சென்றிருந்தான் பரதன். அவன் அயோத்திக்குத் திரும்பி வந்ததும் நடந்ததை அறிந்து, அளவில்லாத துன்பம் அடைந்தான். இப்படிப்பட்ட ஒரு பெரும் பழியைத் தேடி வைத்த தன் தாயாரைக் கடிந்தான். இராமன் சென்ற காட்டிற்கே சென்று, அவனை அயோத்திக்குத் திரும்பி வந்து அரசாளும்படி வேண்டினான். இவன்

விருப்பத்திற்கு இராமன் இணங்காத போது, அவனுடைய பாதுகைகள் இரண்டையும் பெற்று வந்து, அவைகளுக்கே பிரதிநிதியாக இருந்து அரசாண்டு வந்தான்.

## ஆரண்ய காண்டம்:

தண்டகாரண்யம் புகுந்த இராமன், கோதாவரி நதிக் கரையிலே, பஞ்சவடி தீரத்திலே, ஒரு பர்ணசாலை கட்டிக் கொண்டு, தன் தம்பி இலக்குமணனுடனும், மனைவி சீதையுடனும் வாழ்ந்து வந்தான். அப்பொழுது இலங்கை அரசன் இராவணன் தங்கை சூர்ப்பணகை என்பவள் வந்து, இராம, லக்குமணரின் அழகைக் கண்டு, அவர்களில் ஒருவரை மணந்து கொள்ள ஆசைப்பட்டாள். இந்த அரக்கியை அவர்கள் வெறுத்து ஒட்டியும் அவள் போகாது நிற்கவே, அவளை அவமானப்படுத்த, இலக்குமணன் அவள் மூக்கை அரிந்து விட்டான். மூக்கறுபட்ட மூளி சூர்ப்பணகைக்காகப் பரிந்து வந்த கரதூஷணாதி ராக்ஷசர்களையெல்லாம் இராமன் கொன்று தீர்த்து விடுகின்றான். இதன் பின்னால் அவள், இலங்கைக்கு ஓடி, தன் அண்ணனான இராவணனிடம் நடந்ததைச் சொல்லி, இராமன் மனைவியான சீதையை அவனுக் காகத் தூக்க எண்ணியபோது தான் மூக்கறுப்பட்ட தாகவும் கூறுகிறாள். சீதையின் அழகைச் சூர்ப்பணகை எடுத்துக் கூறக் கேட்ட இராவணன், சீதையினிடம் மோகம் கொண்டு, வஞ்சனையால் அவளைக் கவர்ந்து சென்று, அசோகவனத்திலே சிறை வைத்து விடு கிறான்.

கிஷ்கிந்தா காண்டம்:

*சீதையைத் தேடிப் புறப்பட்ட இராமனும் இலக்குமணனும், கிஷ்கிந்தையில் அனுமான், சுக்ரீவன் முதலிய வானர வீரர்களைச் சந்திக்கிறார்கள். சுக்ரீவனுக்காக, அவனது அண்ணனான வாலியை இராமன் கொன்று, அவனது நட்பைப் பெறுகிறான். அனுமனாதிவானரர் நான்கு திசைகளிலும் சென்று சீதையைத் தேடுகிறார்கள்.*

சுந்தர காண்டம்:

*அனுமன் கடந்த கடந்து இலங்கை சென்று, அசோக வனத்திடையே சிறையிருந்த சீதையைக் கண்டு, தான் இராமதூதன் என்றும், அவளுக்கு விரைவில் விடுதலை கிடைக்கும் என்றும் சொல்லுகிறான். பலம் மிகவும் உடைய இந்த அனுமன், இலங்கை நகரிலே அசோக வனத்தை அழித்து, இராவணனது சேனாவீரர் பலரையும் கொன்று, இலங்கை நகரரையே தீயிட்டுக் கொளுத்திவிட்டுத் திரும்பிவந்து, இராமனிடம் சீதை இலங்கையிலே சிறையிருப்பதைக் கூறுகிறான்.*

யுத்த காண்டம்:

*இராமனும் இலக்குமணனும், வானர சேனையுடன், இலங்கைக்குச் செல்கிறார்கள். இராமேஸ்வரத்துக்கும், இலங்கைக்கும் இடையிலுள்ள கடலிலே பெரிய அணை ஒன்று கட்டி, அந்த அணை வழி நடந்து, சேனாவீரரும் பிறரும் இலங்கை சேர்கிறார்கள். இலங்கை அரசன் தம்பியான விபீஷணன், தன் அண்ணனை வெறுத்து ஒதுக்கிவிட்டு, இராமனிடம்*

வந்து சரண் புகுந்து விடுகிறான். இராம-ராவண யுத்தம் நடக்கிறது. கும்பகர்ணன், இந்திரசித்தன் முதலிய வீரர்கள் எல்லோரும் மாண்டு மடிகிறார்கள். கடைசியில், இராமன் இராவணனையும் கொன்று வெற்றிமாலை சூடுகிறான்; சீதையும் சிறையிலிருந்து மீட்கப்படுகிறாள். இலங்கா நகரத்தை விபீஷண னுக்குப் பட்டம் கட்டி வைத்துவிட்டு, இராமன் சீதா சமேதனாய் அயோத்தி வந்து முடிசூடி, சகலரும் போற்றும் வண்ணம் அரசு புரிகிறான்.

# சீதா கல்யாணம்

## 1. கடவுள் வணக்கம்

எந்தக் காரியமானாலும், அந்தக் காரியத்தை எல்லாம் வல்ல கடவுளைத் தொழுத பின்பே ஆரம்பிக்க வேண்டும். நூலாசிரியர்கள் பலரும், தங்கள் தங்கள் வழிபடு கடவுளையே முதலில் தொழுதல் வழக்கம். ஆனால் கவிச்சக்கரவர்த்தி கம்பரோ; தாம் எழுதிய காவியத்தில், எல்லா மதத்தினர்க்கும் பொதுவான ஒரு தெய்வ வணக்கத்தைச் சொல்கிறார். 'இந்த உலகத்தையும், மற்றுமுள்ள அண்டங்களையும் உண்டாக்கிக் காத்து அழித் தலையே தனது தினசரி விளையாட்டாகக் கொண்டுள்ள ஒரு பரம்பொருளை நான் வணங்குகிறேன்' என்பதுதான் அவரது கடவுள் வணக்கம்.

உலகம் யாவையும் தாம் உள ஆக்கலும்,
நிலைபெறுத்தலும், நீக்கலும், நீங்கலா
அலகு இலா விளையாட்டு உடையார் அவர்
தலைவர்: அன்னவர்க்கே சரண் நாங்களே.

## 2. அவையடக்கம்

ஓர் ஆசிரியர் எவ்வளவுதான் கல்வி கேள்விகளில் வல்லவராயிருந்தாலும், தாம் செய்ய இருக்கும் நூலினை உலகத்தார் எவ்விதம் ஏற்றுக் கொள்வார்களோ என்று அஞ்சியவராய், உலக மக்களாகிய சபையினரிடம் தமது அடக்கத்தைத் தெரிவித்துக் கொள்ளுதல் ஒரு மரபாக இருந்து வருகிறது. இதைத்தான் அவையடக்கம் என்பார்கள். கம்பர் இம்மரபை ஒட்டியும், வால்மீக முனிவர் எழுதிய இராம கதையைத் தமிழில் எடுத்துச் சொல்லுவது உண்மையாகவே மிகவும் கஷ்டசாத்தியமான காரியம் என்பதை உணர்ந்தும், அவையடக்கம் கூறுகிறார். வால்மீகர் இவ்வுலகுக்குத் தந்தருளிய இப்பெரிய இராம கதையைத் தமிழில் ஆர்வத்தோடு தாம் எழுத முனைந்திருப்பது, பரந்த பாற்கடல் முழுவதையும் ஒரு சிறு பூனை நக்கிக் குடித்துவிட முயலுவது போலத்தான் இருக்கிறது என்று கம்பர் அடக்கமாகக் கூறுகிறார். சிறு பிள்ளைகள், தரையிலே கோடுகள் இழுத்து, 'இது வீடு, இது அரங்கம்' என்றெல்லாம் விளையாடுகின்ற போது, சிற்ப நூல் வல்லார், 'இது சிற்ப சாஸ்திரத்தில் சொல்லப்பட்டபடி யில்லை' என்று எப்படிக் குற்றம் சாட்ட மாட்டார்களோ, அதுபோலக் கற்றறிந்த பெரியார்களும் தம்முடைய நூலில் காணப்படும் குற்றங்களைப் பொருட்படுத்த

*மாட்டார்கள் என்ற நம்பிக்கையோடுதான், இந் நூலைத் தாம் இயற்ற முனைந்ததாகவும் அவர் சொல்லு கிறார்.*

ஓசை பெற்று உயர் பாற்கடல் உற்று, ஒரு
பூசை முற்றவும் நக்குபு புக்கென,
ஆசை பற்றி அறையலுற்றேன், மற்று, இக்
காசில் கொற்றத்து இராமன் கதை, அரோ!

அறையும் ஆடரங்கும் படப் பிள்ளைகள்
தறையில் கீறிடில், தச்சரும் காய்வரோ?
இறையும் ஞானம் இலாத என் புன்கவி
முறையில் நூல் உணர்ந்தாரும் முனிவரோ?

*இனி இராம கதை ஆரம்பமாகின்றது. வட இந்தியா விலே, சரயு நதி தீரத்தில் உள்ள கோசல நாட்டைத் தசரதன் என்ற ஓர் அரசன், அயோத்தி நகரில் இருந்து அரசாண்டு வந்தான். அந்த நாட்டையும், நகரத்தையும், அந்த நாட்டில் ஓடும் சரயு நதியையும் கம்பர் அழகாக வர்ணிக்கிறார்.*

## 3. சரயு நதி

*சரயு நதி இமயமலையிலே உற்பத்தியாகி, நாட்டிலுள்ள ஏரி குளம் முதலிய நீர்த்துறைகள் பலவற்றிலும் பரவி, கடைசியில் கடலிற் சென்று கலந்தது. இப்படி இந்நதி பல இடத்தும் பரவிய தன்மை, பல சமயவாதிகள் தம் தெய்வம், எம் தெய்வம் என்றெல்லாம் கூறி வழிபடும் ஒரே பரம்பொருள், பலவாய் வியாபித்தது போல இருந்தது.*

கல்லிடைப் பிறந்து போந்து கடலிடைக் கலந்த நீத்தம்,
எல்லையில் மறைகளாலும் இயம்பரும் பொருள் ஈதென்னத்
தொல்லையில் ஒன்றேயாகித் துறைதொறும் பரந்த சூழ்ச்சி,
பல்பெரும் சமயம் சொல்லும் பொருளும் போல் பரந்தது
அன்றே.

*கோசல நாட்டில் ஓடிய சரயு நதியின் வெள்ளம், தோப்புகள், சண்பகச் சோலைகள், தடாகங்கள், மணற் கேணிகள், கமுக வனங்கள், வயல்கள் ஆகிய எல்லா இடங்களிலும் பரந்து சென்றது, உடம்பில் உயிர் புகுந்து உலாவியது போலவே இருந்தது.*

தாது உகு சோலை தோறும்,
சண்பகக் காடு தோறும்,
போது அவிழ் பொய்கை தோறும்,
புதுமணத் தடங்கள் தோறும்,

மாதவி வேலிப் பூக வனம் தோறும்,
வயல்கள் தோறும்,
ஓதிய உடம்பு தோறும்
உயிர் என, உலாயது அன்றே.

## 4. கோசல நாடு

*இத்தகைய சரயு நதி ஓடுகின்ற நாட்டின் வளத்தைப் பற்றிக் கேட்பானேன்! வயல்களின் வரப்புக்களில் எல்லாம் முத்துக்கள் சிந்திக் கிடக்கின்றன; வாய்க்கால் கரைகளிலே காணப்படுவது தங்கக் கட்டிகள்தான்; பரம்பு அடித்துச் சமமாக்கிய இடத்தில் எல்லாம் பவளங்களே கிடக்கின்றன; தேன் அந்த நாட்டிலே தண்ணீர் பட்ட பாடுதான்; அன்னங்கள் அங்குமிங்கும் நடப்பதும், வண்டுகள் ரீங்காரம் செய்வதும் அழகிய காட்சிகளே. இவையெல்லாம் அந்த நாட்டின் செழிப்பைக் காட்டுகின்றன.*

வரம்பு எலாம் முத்தம்; தத்து
மடை எலாம் பணிலம்; மாநீர்க்
குரம்பு எலாம் செம்பொன்; மேதிக்
குழி எலாம் கழுநீர்க் கொள்ளை;
பரம்பு எலாம் பவளம்; சாலிப்
பரப்பு எலாம் அன்னம்; பாங்கர்
கரம்பு எலாம் செந்தேன்; சந்தக்
கா எலாம் களிவண்டு ஈட்டம்.

*(பணிலம் – சங்கு. குரம்பு – செய்கரை)*

*பொதுவாக நாட்டின் வளத்தைக் கூறிய கம்பர் ஒரு சோலையில் நடக்கும் அழகிய காட்சி ஒன்றையும் சித்திரித்துக் காட்டுகிறார். மயில்களாகிய நாட்டியப்*

பெண்கள் தம் தோகையை விரித்து நடனம் ஆடு கின்றனர். செந்தாமரைகளாகிய மாதர் மலர்களாகிய மணி விளக்குகளை ஏந்துகின்றனர். மேகங்கள் மத்தளம் கொட்டுகின்றன. வண்டுகள் பாடுகின்றன. நீல மலர்கள் கண் விழித்து நோக்குகின்றன. அருவியாகிய திரை, நாடக அரங்கத்திலே விடப்பட்டிருக்கிறது. இத்தகைய அழகுகளோடு கம்பீரமாகக் கொலு வீற்றிருக்கிறாள். கோசல நாட்டின் அதிதேவதை.

தண்டலை மயில்கள் ஆட, தாமரை விளக்கம் தாங்க,
கொண்டல்கள் முழவின் ஏங்க, குவளை கண் விழித்து நோக்க
தெள் திரை எழினி காட்ட, தேம் பிழி மகர யாழின்,
வண்டுகள் இனிது பாட, மருதம் வீற்றிருக்கும், மாதோ!

*(தண்டலை – சோலை, தெள் திரை – தெளிவான அலை, எழினி – நாடகத் திரைச் சீலை)*

ஒரு நாட்டின் பெருமை யெல்லாம் அந்நாட்டி லுள்ள பெண்களைப் பொறுத்ததாகவே இருந்து வந்திருக்கிறது. கோசல நாட்டுப் பெண்களுக்கெல்லாம் செல்வமும் கல்வியும் ஒருங்கே அமைந்திருந்தன. தங்களிடம் வருந்தி வந்தவர் அனைவர்க்கும் அவள்கள் வேண்டியதையெல்லாம் அள்ளியள்ளிக் கொடுத் தார்கள். அவர்களது வீட்டிலோ, எப்பொழுதும் விருந்தினர்கள் வந்தவண்ணமும் போன வண்ணமு மாகத்தான் இருக்கும். விருந்தோம்புதலைவிட அவர் களுக்குச் சிறந்த வேலை ஒன்றும் இருக்கவில்லை.

பெருந்தடம் கண் பிறை நுதலார்க்கு எலாம்
பொருந்து செல்வமும் கல்வியும் பூத்தலால்,
வருந்தி வந்தவர்க்கு ஈதலும், வைகலும்
விருந்தும் அன்றி விளைவன யாவையே?

*இத்தகைய பெண்மணிகள் வசிக்கும் நாட்டிலே, குற்றங்கள் செய்வாரும் உண்டா? நாட்டிலே குற்றவாளிகள் இல்லாவிட்டால் அங்கு யமனுக்கு வேலையுண்டா? இப்படி அந்நாட்டு மக்கள் தங்களைச் செம்மைப்படுத்திக் கொண்டிருப்பதால், அவர்களுடைய பண்பட்ட உள்ளத்திலே கோபம் முதலிய துர்க்குணங்கள் தோன்றுவதற்குத்தான் இடமுண்டா? அவர்கள் எப்பொழுதும் நல்ல தரும நெறியிலேயே ஈடுபட்டிருந்ததால், அந்நாடு முன்னேற்றம் அடைந்து கொண்டே வருவதில் ஏதாவது வியப்புண்டா? இந்தக் கேள்விகளுக்கெல்லாம் கம்பர் எவ்வளவு அழகாகப் பதில் சொல்கிறார்!*

கூற்றம் இல்லை ஓர் குற்றம் இலாமையால்;
சீற்றம் இல்லை தம் சிந்தையின் செவ்வியால்;
ஆற்றல் நல்அறம் அல்லது இலாமையால்,
ஏற்றம் அல்லது இழிதகவு இல்லையே.

## 5. அயோத்தி நகரம்

கோசல நாட்டின் பிரதான பட்டணம் அயோத்தி நகரம். எல்லாவிதமான போகங்களும் நிறைந்த வானுலகத்திலேயுள்ள தேவர்கள்கூட இந்த நகரத்தில் வசிக்க விரும்புவார்கள் என்றால், இந்த நகரத்தின் மகத்துவத்தைப் பற்றிச் சொல்ல வேண்டுமா? இந்த நகரம் பூமாதேவியின் முகம் போலவும், அவள் முகத்தில் அணியும் திலகம் போலவும், கழுத்தில் அணியும் மாங்கல்யம் போலவும், மார்பில் அணியும் ஆபரணம் போலவும், இலக்குமி வசிக்கக்கூடிய செந்தாமரை மலர் போல்வும், திருமால் தன் மார்பில் அணிந்திருக்கும் ஒப்பற்ற ஆபரணமாகிய கவுத்துவ மணியை வைப்பதற்காகச் செய்த ஒரு பொற்பெட்டி போலவும், அத்திருமால் வசிக்கும் வைகுந்தம் போல வும், ஊழிக் காலத்தும் அழியாத ஓர் இடம் போலவும் பொலிவுற்று விளங்குகின்றது.

நிலமகள் முகமோ? திலகமோ? கண்ணோ?
    நிறை நெடு மங்கல நாணோ?
இலகு பூண் முலைமேல் ஆரமோ? உயிரின்
    இருக்கையோ? திருமகட்கு இனிய
மலர் கொலோ? மாயோன் மார்பில் நன்மணிகள்
    வைத்த பொன் பெட்டியோ? வானோர்
உலகின் மேல் உலகோ? ஊழியின் இறுதி
    உறையுளோ? யாது என உரைப்பாம்?

*இந்த நகரத்தில் எங்கு பார்த்தாலும் வெண்ணிற மாடங்கள் நிறைந்திருக்கின்றன. இத்தகைய அழகிய மாளிகைகள் மட்டுந்தானா? சிற்றரசர் பலர் வந்து தங்கள் தங்கள் பகுதிப் பணத்தைச் சக்கரவர்த்திக்கு மரக்கால் கொண்டு அளந்து கொட்டுகிற மண்டபம் ஒரு பக்கம்; நடன மாதர் ஆடும் நாடக அரங்கம் ஒருபுறம்; வேதியர்கள் இருந்து வேதங்கள் ஓதுவதற் குரிய சாலைகளும், இவற்றிற்கெல்லாம் மேலாகக் கலைகளை ஆராய்ச்சி செய்யும் கலைவல்லவர் கூடும் பட்டி மண்டபமும் இங்கு உண்டு. இவற்றை நாம் தெரிகிறபோது நகரத்தின் செல்வப் பெருக்கையும் கலை வளர்ச்சியையும் அறிந்து கொள்கிறோம்.*

மன்னவர் தரு திறை அளக்கும் மண்டபம்,
அன்னம் மெல் நடையவர் ஆடும் மண்டபம்,
உன் அரும் அருமறை ஓதும் மண்டபம்,
பன் அரும் கலை தெரி பட்டி மண்டபம்.

*அந்த நகரத்திலே நிறைந்த கல்வியில்லாதவர்களே இல்லை. ஆதலால், 'இவர் கல்வியறிவில் அவரை விடத் தேர்ந்தவர்' என்ற முறையில் சொல்வதற்கே இட மில்லை. அங்குள்ள எல்லா மக்களுக்கும் பொருட் செல்வமும் கல்விச் செல்வமும் நிறைந்திருத்தலினால், இவர் பணக்காரர், இவர் ஏழை என்ற பாகுபாடு செய்வதற்கு முடியாதவர்கள் ஆகி விடுகிறோம் என்று அந்த நகரின் சிறப்பைச் சொல்லுகிறார் கம்பர்.*

கல்லாது நிற்பார் பிறர் இன்மையின், கல்வி முற்ற
வல்லாரும் இல்லை. அவை வல்லர் அல்லாரும் இல்லை;
எல்லாரும் எல்லாப் பெருஞ் செல்வமும் எய்தலாலே
இல்லாரும் இல்லை, உடையார்களும் இல்லை, மாதோ!

## 6. தசரதனது அரசியல்

இத்தகைய கோசல நாட்டை ஆண்டு வந்தவன் தசரதன். அவன் சூரிய குலத்தில் உதித்தவன். இந்நாட்டில் வாழும் குடிகளுக்கெல்லாம் தாய் போன்றவன் அவன். அவர்களுக்கு வேண்டிய நலன்களையெல்லாம் செய்வதில் அவர்கள் இயற்றிய தவமே உருவெடுத்து வந்தவன் அவன் என்று சொல்லும்படியாக இருந்தான். மக்களை யெல்லாம் நன்னெறிகளிலே ஒழுகச் செய்து, அவர்கள் நற்கதியடையும்படி செய்யும் புத்திரன் போலவும் அவன் இருந்தான். குற்றஞ் செய்தவர்களைத் தண்டிப்பதில் நோய் போல்வான். நுட்பமான பொருள் அறியும் அறிவும், அவனிடம் நிரம்பியிருந்தது. இத்தகைய அரசனது ஆட்சியில் வாழும் குடிகளுக்குத் தான் ஏதாவது குறை இருக்க முடியுமா?

தாய் ஒக்கும் அன்பின்; தவம் ஒக்கும் நலம் பயப்பின்;
சேய் ஒக்கும், முன் நின்று செல்கதி உய்க்கும் நீரால்;
நோய் ஒக்கும் என்னின், மருந்து ஒக்கும் நுணங்கு கேள்வி
ஆயப் புகுங்கால் அறிவு ஒக்கும் எவர்க்கும் அன்னான்

இப்படிப்பட்ட தசரதன், மன்னுயிரெல்லாம் தன்னுயிர்போலப் பாதுகாத்தலால் உலகத்திலுள்ள சகல ஜீவராசிகளும் வாழும் ஓர் உடம்புதான் அவன் என்று சொல்லும்படி இருந்தான்.

வயிர வான் பூண் அணி மடங்கல் மொய்ம்பினான்
உயிர் எலாம் தன் உயிர் ஒப்ப ஓம்பலால்,
செயிர் இலா உலகினில் சென்று நின்று வாழ்
உயிர் எலாம் உறைவது ஓர் உடம்பும் ஆயினான்.

(மடங்கல் – சிங்கம்– மொய்ம்பு – பலம்)

*அவனுக்குப் பகையரசர்களே கிடையாது. அதனால் நாட்டின் மீது படையெடுப்பார் ஒருவரும் இல்லை; போரும் இல்லை. ஆகவே அவன் கவனம் முழுவதும் நாட்டிற்கு வேண்டும் நன்மைகளை நினைந்து நினைந்து செய்வதிலேதான் சென்றது. ஒரு தரித்திரன் தனக்குள்ள ஒரே வயலை எவ்வளவு சாக்கிரதையுடன் பாதுகாப்பானோ, அது போலத் தன் நாடு முழுவதை யும் கவனமாகக் காத்து அரசு செலுத்தி வந்தான்.*

'எய்' என எழு பகை எங்கும் இன்மையால்
மொய் பாரு தினவுறு முழவுத் தோளினான்,
வையகம் முழுவதும், வறிஞன் ஓம்பும் ஓர்
செய் எனக் காத்து, இனிது அரசு செய்கின்றான்.

## 7. இராமனது அவதாரம்

சக்கரவர்த்தி தசரதன் ஒரு நாள் தனது குலகுரு வாகிய வசிட்டரை வணங்கி, தனக்குப் பின் கோசலை நாட்டை ஆள்வதற்கு ஒரு புத்திரன் இல்லையே என்று வருந்தி, தன் மனக் கவலையை எடுத்து உரைதான். வசிட்டரும், திருமால் அரக்கரை அழிப்பதற்காகத்தான் இராமாவதாரம் எடுப்பதாய்க் கூறியுள்ளதை நினைந்து, தசரதனைப் புத்திரகாமேட்டி யாகம் செய்யும்படி கட்டளையிட்டார். தசரதன் அப்படியே செய்ய, அவன் மனைவியரில் கோசலைக்கு இராமனும், கைகேயிக்குப் பரதனும், சுமித்திரைக்கு இலக்குமணனும் சத்துருக் கனும் பிறந்தார்கள். மக்கள் நால்வரும் வளர்ந்து கல்வி பயின்று, யௌவனப் பருவம் அடைந்தார்கள். இவர்களையெல்லாம் கண்ட மாந்தர்கள் மழை கண்டு செழிக்கும் பயிர் போலக் களித்தார்கள். தசரதனும் தனது மக்கட் பேற்றில் மகிழ்ந்திருந்தான்.

## 8. இராம, லக்குமணரை விசுவாமித்திரர் அடைக்கலமாகப் பெறுதல்

*இப்படித் தசரதன் இனிது வாழ்ந்திருக்கும் போது, ஒரு நாள், அவனுடைய ராஜசபைக்கு ராஜரிஷி விசுவாமித்திரர் வந்து சேர்ந்தார். அவருடைய வரவு தன் முன்னோர் செய்த தவத்தின் பலன்தான் என்றெல்லாம் சொல்லி உபசரித்து அவரை வணங்கினான் தசரதன்.*

'நிலம் செய் தவம் என்று உணரின், அன்று, நெடியோய்! என்
நலம் செய்வினை உண்டு எனினும், அன்று; நகர், நீ யான்
வலம் செய்து வணங்க எளிவந்த இது, முந்து என்
குலம் செய் தவம்!' என்று இனிது கூற, முனி கூறும்.

*விசுவாமித்திரரோ, தாம் செய்யும் வேள்வியை அரக்கர்கள் அழித்து இடையூறு செய்வதால், அந்த வேள்வியைக் காக்க இராமனைத் துணைபெறவே வந்திருக்கிறார். ஆதலால் அவரும் தசரதனைப் பலபடியாகப் புகழ்ந்து முகஸ்துதி செய்கிறார்.*

'என் அனைய முனிவரரும் இமையவரும்
இடையூறு ஒன்று உடையரானால்,
பல் நகமும் நகு வெள்ளிப் பனி வரையும்,
பாற்கடலும், பதும பீடத்து
அந்நகரும், கற்பக நாட்டு அணி நகரும்,
மணிமாட அயோத்தி என்னும்

பொன் நகரும் அல்லாது புகல் உண்டோ,
இகல் கடந்த புலவு வேலோய்?

'இன் தளிர்க் கற்பக நறுந்தேன் இடை துளிக்கும்
நிழல் இருக்கை இழந்து போந்து,
நின்று அளிக்கும் தனிக் குடையின் நிழல்
ஒதுங்கி, குறை யிரந்து நிற்ப, நோக்கி,
குன்று அளிக்கும் குல மணித் தோள் சம்பரனைக்
குலத்தோடும் தொலைத்து, நீ கொண்டு
அன்று அளித்த அரசு அன்றோ, புரந்தான் இன்று
ஆள்கின்றது, அரச!' என்றான்.

*இத்தகைய பாராட்டுரைகளைக் கேட்ட தசரதன் சந்தோஷ சாகரத்தில் மூழ்கியவனாய், தான் அவருக்குச் செய்ய வேண்டிய காரியம் ஏதாவது உளதானால் அதைக் கூறி அருளும்படி வேண்டினான். விசுவாமித்திரரும், தமது வேள்வியைக் காக்க அரசனது மூத்த குமாரனான இராமனைத் தம்முடன் அனுப்பித் தரும்படி கேட்டார்.*

'தருவனத்துள் யான் இயற்றும் தவ வேள்விக்கு
இடையூறா, தவம் செய்வோர்கள்
வெருவரச் சென்று அடை காம வெகுளி என,
நிருதர் இடை விலக்கா வண்ணம்,
செரு முகத்துக் காத்தி; நின் சிறுவர்
நால்வரினும் கரிய செம்மல்
ஒருவனைத் தந்திடுதி!' என, உயிர் இரக்கும்
கொடும் கூற்றின், உளையச் சொன்னான்.

*இதைக் கேட்ட தசரதன் பட்ட துயருக்கு அளவே யில்லை. விசுவாமித்திரரது சொல், வேல் பாய்ந்த*

*புண்ணிலே தீக்கங்கு நுழைந்ததுபோல் இருந்தது. உயிர் ஊசலாடிற்று. ஒரு பிறவிக் குருடன் கண் பெற்று இழந்தால் என்ன துன்பம் அடைவானோ அத்தகைய துன்பத்தை அடைந்தான் அரசன்.*

எண் இலா அரும் தவத்தோன் இயம்பிய சொல்,
மருமத்தின் எறிவேல் பாய்ந்த
புண்ணில் ஆம் பெரும் புழையில் கனல் நுழைந்தால்
எனச் செவியில் புகுதலோடும்,
உள் நிலாவிய துயரம் பிடித்து உந்த,
ஆர் உயிர் நின்று ஊசல் ஆட,
கண் இலான் பெற்று இழந்தான் என உழந்தான்
கடுந் துயரம் கால வேலான்.

*இத்தகைய சங்கடங்களிலிருந்து தப்ப, தானே முனிவருடன் சென்று வேள்வி காத்துத் தருவதாகச் சொல்லி, முனிவரைத் தன்னுடன் வேள்வித் தலத்திற்கு எழுந்தருளும்படி வேண்டினான் தசரதன்.*

தொடை ஊற்றும் தேன் துளிக்கும் நறும் தாரான்
ஒருவண்ணம் துயரம் நீங்கி,
'படை ஊற்றம் இலன், சிறியன் இவன், பெரியோய்!
பணி இதுவேல், பனி நீர்க் கங்கை
புடை ஊற்றும் சடையானும், புரந்தரனும்,
நான்முகனும் புகுந்து செய்யும்
இடையூற்றுக்கு இடையூறா யான் காப்பென்:
பெரு வேள்விக்கு எழுக!' என்றான்.

*இதைக் கேட்ட விசுவாமித்திரர், தமது வேண்டு கோளை அரசன் உதாசீனம் செய்து விட்டான் என்று கருதி, அடங்காத கோபம் கொண்டார்.*

என்றனன்: என்றலும், முனிவோடு எழுந்தனன் மண்
படைத்த முனி; இறுகிக் காலம்
அன்று என, ஆம் என, இமையோர் அயிர்த்தனர்! மேல்
வெயில் சுரந்தது! அங்கும் இங்கும்
நின்றனவும் திரிந்தன! மீ நிவந்த கொழும்
கடைப் புருவம் நெற்றி முற்றச்
சென்றன! வந்தது நகையும்! சிவந்தன கண்!
இருண்டன போய்த் திசைகள் எல்லாம்!

*தசரதனது நிலையையும், விசுவாமித்திரர் கோபத்தையும் உணர்ந்த அரசனது குலகுருவான வசிட்டர் இராமனை முனிவருடன் கூட்டி அனுப்புவதால் அவனுக்கு ஏற்பட இருக்கும் நன்மைகளையெல்லாம் விளக்கமாக எடுத்துக்கூறி, இராமனை முனிவருடன் அனுப்பி வைக்கும்படி வேண்டினார். அரசனும் தனது குருவின் ஆணையைச் சிரமேற்கொண்டு, இராமனையும் இலக்குவனையும் அழைத்து விசுவாமித்திரரிடம் அடைக்கலமாகக் கொடுத்தனுப்பினான்.*

வந்த நம்பியைத் தம்பி தன்னொடும்
முந்தை நால்மறை முனிக்குக் காட்டி, 'நல்
தந்தை நீ, தனித் தாயும் நீ இவர்க்கு,
எந்தை! தந்தனன்: இயைந்த செய்க!' என்றான்.

## 9. தாடகை வதை

*இராம லக்குமணரைப் பெற்ற விசுவாமித்திரர் தசரதனை வாழ்த்திவிட்டுத் தமது வேள்விச்சாலைக்குக் குமரர் இருவரையும் அழைத்துச் சென்றார். அப்படிப் போகின்ற வழியில் மூவரும் ஒரு பாலை நிலத்தை அடைந்தார்கள். பாலையின் வெம்மையே மிகவும் கடுமையாக இருந்தது.*

பரிதி வானவன் நிலம் பசை அறப் பருகுவான்
விருது மேற்கொண்டு, உலாம் வேனிலே அன்றி வேறு
இருது ஒன்று இன்மையால், எரி சுடர்க் கடவுளும்
கருதின் வேம் உள்ளமும்; காணில் வேம் நயனமும்.

*(உலாம் – உலாவும். இருது – பருவம். வேம் – வேகும்)*

படியின் மேல் வெம்மையைப் பகரினும், பகரும் நா
முடிய வேம்; முடிய மூடிருளும், வான் முகடும் வேம்;
விடியுமேல், வெயிலும் வேம்; மழையும் வேம்; மின்னினோடு
இடியும் வேம்; என்னில், வேறு யாவை வேவாதவே?

*இராமன் தனது தந்தை தசரதன் அரசாளும் நாட்டிலே இப்படி ஒரு பகுதி மட்டும் அழிந்து பாலையாக இருப்பதற்குக் காரணம் யாதோ என்று முனிவரிடம் கேட்க, முனிவர் தாடகை என்ற ஓர் அரக்கி அங்கு வசிப்பதாகவும், அவள்தான் அந்த நாட்டின் வளத்தையெல்லாம் அழித்து இப்படிப்பட்ட*

பாலை நிலமாக மாற்றி விட்டாள் என்றும் எடுத்துரைத்தார்.

'பெரு வரை இரண்டொடும், பிறந்த நஞ்சொடும்,
உரும் உறழ் முழக்கொடும், ஊழித் தீயொடும்,
இரு பிறை செறிந்தெழு கடல் உண்டாம் எனின்,
வெருவரு தோற்றத்தள் மேனி மானுமே!

*(உரும் உறழ் – இடியை ஒத்த. மானும் – ஒக்கும்)*

'சூடக அரவு உறழ் சூலக் கையினள்,
காடு உறை வாழ்க்கையள், கண்ணில் காண்பரேல்
ஆடவர் பெண்மையை அவாவும் தோளினாய்!
தாடகை என்பது அச் சழக்கி நாமமே.

*(சூடக அரவு – கை வளையாக அணிந்துள்ள பாம்பு.)*

'உளப்பரும் பிணிப்பு உறா, உலோபம் ஒன்றுமே
அளப்பு அரும் குணங்ளை அழிக்கும் ஆறு போல்,
கிளப்பு அரும் கொடுமை அவ்வரக்கி, கேடு இலா
வளப் பரு மருத வைப்பு அழித்து மாற்றினாள்.'

*(கிளப்பு அரும் – சொல்லுதற்கு அரிய. வைப்பு – நிலம்)*

இப்படி இவர்கள் பேசிக் கொண்டிருக்கும் போதே, தாடகை, ஒரு பெரிய அஞ்சன மலை தீயைக் கக்கிக் கொண்டு நடந்து வருவது போல, இவர்கள் முன்னாலே வந்து சேர்ந்தாள். கோபத் தீ கக்கும் அவளது கண்களால் இவர்களை அலற விழித்துப் பார்த்தாள். 'உங்களையெல்லாம் விதி என்னிடம் தள்ளிக்கொண்டு வந்ததோ?' என்றெல்லாம் ஆர வாரித்து, அவர்கள் மேலே சூலத்தை எறியத் தொடங் கினாள். இப்படியெல்லாம் அவள் செய்தும், பெண்

*கொலை செய்வது பாவம் என்று எண்ணியே திகைத்து நின்றான் இராமன். இதனை ஊகித்துணர்ந்த விசுவாமித்திரர், 'தாடகை போன்ற கொடியவளைப் பெண்ணென்று கருதுதல் கூடாது' என்று எடுத்து உரைத்து அவள் கொல்லுதற்கு உரியவளே என்று கூறினார். இதற்கும் இராமன் அசையாதது கண்டு, கடைசியாக, 'இவளைக் கொல்லு!' என்று கட்டளையே இட்டு விட்டார். முனிவரிட்ட கட்டளையை நிறை வேற்றுவதே கடன் எனக்கொண்டு, தன் வில்லினை வளைத்து அவள்மீது இராமன் பாணத்தை எய்தான்.*

மாலும் அக்கணம் வாளியைத் தொட்டதும்;
கோல வில் கால் குனித்ததும் கண்டிலர்:
காலனைப் பறித்து அக்கடியான் விட்ட
சூலம் அற்றன துண்டங்கள் கண்டனர்!

*தாடகை மீது பாய்ந்த இராமனது அம்பு, அவள் நெஞ்சை ஊடுருவிப் போய் விடுகின்றது.*

சொல் ஒக்கும் கடிய வேகச் சுடுசரம் கரிய செம்மல்
அல் ஒக்கும் நிறத்தினாள் மேல் விடுதலும், வயிரக் குன்றக்
கல் ஒக்கும் நெஞ்சில் தங்காது அப்புறம் கழன்று, கல்லாப்
புல்லர்க்கு நல்லோர் சொன்ன பொருள் எனப் போயிற்று,
அன்றே!

*தாடகையும் அலறி வீழ்ந்து மடிந்தாள்.*

பொன் நெடும் குன்றம் அன்னான் புகர் முகப் பகழி என்னும்
அந் நெடும் கால வன் காற்று அடித்தலும், இடித்து வானில்
கல் நெடு மாரி பெய்ய, கடையுகத்து எழுந்த மேகம்
மின்னொடும் அசனியோடும் வீழ்வதே போல வீழ்ந்தாள்!

*(புகர் முகப் பகழி – ஒருவகை அம்பு. அசனி – இடி.)*

*விசுவாமித்திரரது கட்டளையை மறுக்காது செய்த இந்த இராமனது முதற் போரிலே, அரக்கரது உயிரை உண்பதற்கு இதுவரை கூசிப் பயந்து கொண்டிருந்த யமனும், அவர்களுடைய உயிரின் ருசியைச் சற்றே தெரிந்து கொள்கிறான்.*

வாச நாள் மலரோன் அன்ன
    மாமுனி பணி மாறாத
காசு உலாம் கனகப் பைம் பூண்
    காகுத்தன் கன்னிப் போரில்,
கூசி, வாள் அரக்கர் தங்கள்
    குலத்து உயிர் குடிக்க அஞ்சி,
ஆசையால் உழலும் கூற்றும்
    சுவை சிறிது அறிந்தது அன்றே!

*(காசு – இரத்தினம். கன்னி – முதல்.)*

*இராமனது அரிய செய்கையைப் பாராட்டி விண்ணவர் பூச்சொரிந்து அவனை வாழ்த்தினார்கள். விசுவாமித்திரரை, அவனுக்குத் தெய்வப் படைகள் எல்லாம் கொடுக்கும்படியும் கேட்டுக் கொண்டார்கள்.*

## 10. இராம, இலக்குவர் விசுவாமித்திரர் வேள்வி காத்தல்

தேவர்கள் விரும்பியபடியே விசுவாமித்திர முனிவரும், இராமனுக்குத் தெய்வப் படைகளை யெல்லாம் கொடுத்து உதவினார். பின்னர் விசுவா மித்திர - ராம - லக்குமணர் மூவரும் வேள்விச் சாலைக்குப் புறப்பட்டார்கள். வழியிலே ஓர் அழகிய சோலையிலே தங்கினார்கள். அந்தச் சோலைதான், முன்னாளிலே திருமால் வாமன உருவத் தோடு மாவலிச் சக்கரவர்த்தியிடம் வந்து, மூன்றடி மண் யாசித்துப் பெற்று, அவனைத் தன் திருவடிக் கீழ் இருத்தி, பின்னர் தங்கியிருந்து தவம் செய்த இடம் என்று விசுவாமித்திரர் இராம , லக்குமணருக்கு எடுத்துரைத்தார்.

தங்கள் நாயகரின் தெய்வம்
    தவம் பிறிது இலை என்று எண்ணும்
மங்கைமார் சிந்தை போலத்
    தூயது, மற்றுங் கேளாய்!
எங்கள் மா மறைக்கும், தேவர்
    அறிவிற்கும், பிறர்க்கும் எட்டாச்
செங்கண் மால் இருந்து மேல் நாள்
    செய் தவம் செய்தது அன்றே.

*திருமால் தவம் செய்த அந்த இடத்திலேயே தாமும் இருந்து யாகம் செய்யப் போவதாகச் சொல்லி, விசுவாமித்திரர் தமது வேள்வியைத் தொடங்குகிறார். இராம, லக்குமணரும், கண்களை இமைகள் காப்பது போல, விசுவாமித்திரருடைய வேள்வியைக் காத் தார்கள்.*

எண்ணுதற்கு, ஆக்க அரிது இரண்டு மூன்று நாள்
விண்ணவர்க்கு ஆக்கிய முனிவன் வேள்வியை,
மண்ணினைக் காக்கின்ற மன்னன் மைந்தர்கள்
கண்ணினைக் காக்கின்ற இமையின் காத்தனர்.

*இவ்வாறு இவர்கள் வேள்வி காத்து வரும்போது ஒருநாள், வில்லும் வாளும் தாங்கிய அரக்கர் கூட்டம் வானிலே திரண்டு, இடி போல ஆரவாரஞ் செய்து அம்புகளை மழை போலப் பொழிய, இராமன் அவைகளையெல்லாம் தனது பாணத்தால் விலக்கி, ஒரு அம்பால் தாடகை மக்கள் இருவரில் ஒருவனான மாரீசனைச் சமுத்திரத்திலே தூக்கி யெறிந்து, மற்றோர் அம்பால் சுவாகுவைக் கொன்று, வேறு கணையால் மற்ற அரக்கர்களையெல்லாம் கொன்று குவித்து விட்டான். உயிர் தப்பிய இராக்கதர்களோ ஓடி யொளிந்து கொண்டார்கள். விசுவாமித்திரரது வேள்வியும் விக்கின மில்லாமல் முடிவடைந்தது. முனிவனும் இராமனை வாயாரப் புகழ்ந்து போற்றி னார். இவ்வண்ணம் வேள்வி முடித்த பின் விசுவா மித்திரர் விருப்பப்படியே எல்லோரும் மிதிலையில் சனகன் செய்யும் வேள்வியைப் பார்க்கப் புறப்பட் டார்கள்.*

## 11. அகலிகை சாப விமோசனம்

*இப்படிப் புறப்பட்ட முனிவரும் குமரரும், பல ஆறுகள் சோலைகளையெல்லாம் கடந்து மிதிலா நகரத்தைத் தன்னிடத்தே கொண்ட விதேக நாட்டை அடைந்தார்கள்.*

பள்ளி நீங்கிய பங்கயப் பழன நல் நாரை,
வெள்ள வான் களை களைவுறு கடைசியர் மிளிர்ந்த
கள்ள வாள் நெடும் கண் நிழல் கயல் எனக் கருதா,
அள்ளி நாணுறும் அகல் பணை மிதிலை நாடு அடைந்தார்.

*(பழனம் – வயல். கடைசியர் – பள்ளப் பெண்கள். அகல் – அகன்ற. பணை – மருத நிலம்.)*

வரம்பு இல் வான் சிறை மதகுகள் முழவு ஒலி வழங்க,
அரும்பு நாள்மலர், அசோகுகள் அலர் விளக்கு எடுப்ப,
நரம்பின் நான்ற தேன் தாரை கொள் நறுமலர் யாழில்
சுரும்பு பாண் செயத் தோகை நின்று ஆடுவ சோலை.

*(சிறை – அணை. நான்ற – ஒழுகுகின்ற. தாரைகொள் – ஒழுக்கைக் கொண்ட, பாண் செய – இசை பாட. தோகை – மயில்.)*

*அந்த நாட்டிலே அவர்கள் கொஞ்ச தூரம் சென்று மிதிலா நகரத்துக் கோட்டையை நெருங்கும் போது, அங்கே கல்லுருவாயிருந்த அகலிகை, இராமனது பாதத் தூளி படவே, தன் சாபம் நீங்கியவளாய்த் தனது*

*சுய உருவை அடைந்து நின்றாள். அவள் கல்லுரு அடைந்த கதையை விசுவாமித்திரர் இராம, லக்குமண ருக்கு எடுத்துரைத்தார். இராமனது பாத ஸ்பரிசத்தால் அகலிகை சாப விமோசனம் பெற்றதைப் பாராட்டி விசுவாமித்திரர் அவனைப் புகழ்ந்தார்:*

‘இவ் வண்ணம் நிகழ்ந்த வண்ணம்,
இனி இந்த உலகுக்கு எல்லாம்
உய் வண்ணம் அன்றி மற்று ஓர்
துயர் வண்ணம் உறுவது உண்டோ?
மை வண்ணத்து அரக்கி போரில்,
மழை வண்ணத்து அண்ணலே! உன்
கை வண்ணம் அங்கு கண்டேன்,
கால் வண்ணம் இங்கு கண்டேன்!’

## 12. மிதிலையை இராம , லக்குவர் காணுதல்

*சாப விமோசனம் பெற்ற அகலிகையைக் கௌதமனிடம் சேர்த்துவிட்டு, முனிவரும் குமரரும் மிதிலா நகரத்தை நெருங்கினார்கள். மிதிலா நகரம், தன் மதில்களின் மேலே பறக்கும் கொடிகள் என்னும் கைகளை நீட்டி, இலக்குமியாகிய சீதை தன்னிடம் இருக்கிறாள் என்றும், திருமாலாகிய இராமன் அவளைச் சீக்கிரம் அடைவதற்கு வந்து சேர வேண்டும் என்றும் சொல்லி அழைப்பது போலிருந்தது.*

'மை அறு மலரின் நீங்கி,
யான் செய் மாதவத்தின் வந்து
செய்யவள் இருந்தள்' என்று,
செழுமணிக் கொடிகள் என்னும்
கைகளை நீட்டி, அந்தக்
கடிநகர், கமலச் செங்கண்
ஐயனை, 'ஒல்லை வா!' என்று
அழைப்பது போன்றது, அம்மா!

(மை அறு – குற்றமற்ற. செய்யவள் – இலக்குமி. கடிநகர் – காவல் உள்ள நகரம். ஒல்லை – சீக்கிரம்.)

*இத்தகைய அழைப்பைப் பெற்ற இராம லக்குமணரும் முனிவரும், சீதையாகிய லக்ஷ்மி இருத்தலாலே பெருமை பெற்ற மிதிலை நகரத்துள் பிரவேசித்தார்கள்.*

ஆதரித்து, அமுதில் கோல் தோய்த்து,
அவயவம் அமைக்கும் தன்மை
யாது எனத் திகைக்கும் அல்லால்,
மதனற்கும் எழுத ஒண்ணாச்
சீதையைத் தருதலாலே,
திருமகள் இருந்த செய்ய
போது எனப் பொலிந்து தோன்றும்
பொன் மதில் மிதிலை புக்கார்.

*(ஆதரித்து – விரும்பி. திகைக்கும் – திகைப்பான். செய்ய – சிவந்த.)*

*பொன்னும் மணியும் சிதறிக் கிடக்கும் தெருக்களை யெல்லாம் கடந்து சென்றார்கள். அந்தத் தெருக்களிலே தான் எத்தனை எத்தனை மாடங்கள், நடன சாலைகள், நாடக மேடைகள்!*

நெய் திரள் நரம்பின் தந்த மழலையின் இயன்ற பாடல்
தைவரு மகரவீணை, தண்ணுமை, தழுவித் தூங்க,
கைவழி நயனம் செல்ல, கண்வழி மனமும் செல்ல,
ஐயம் நுண் இடையார் ஆடும் ஆடக அரங்கு கண்டார்.

*(நெய்திரள் நரம்பு – தேன் தாரை போல உருட்சியான நரம்பு. தந்த – பாடிய. தைவரு – விரலால் தடவுகின்ற. தண்ணுமை – மத்தளம்.)*

*இத்தகைய நடனசாலைகள் பலவும் கடந்து செல்லும்போது, மாளிகைகளின் உப்பரிகைகளி லிருந்து, சன்னல்கள் வழியாகப் பெண்கள் இவர் களைப் பார்க்கிறார்கள். சாளரம் தோறும் சந்திரன் உதித்தது போல அப்பெண்களுடைய முகங்கள் அழகுடன் விளங்குகின்றன.*

வாள் அரம் பொருத வேலும்,
மன்மதன் சிலையும், வண்டின்
கேளொடு கிடந்த நீலச்
சுருளும், செம்கிடையும் கொண்டு,
நீள் இரும் களங்கம் நீக்கி,
நிரை மணி மாட நெற்றிச்
சாளரம் தோறும் தோன்றும்
சந்திர உதயம் கண்டார்.

*(வாள் அரம் பொருத வேல் – ஒளியையுடைய அரத்தினால் அராவப்பட்ட வேலாயுதம். செம்கிடை – சிவந்த கிடைச்சு. நெற்றிச் சாளரம் – முன்பக்கத்திலுள்ள பலகணி.)*

*இப்படி மிதிலா நகரத்துத் தெருக்கள் வழியாகச் சென்று கொண்டிருந்த முனிவரும் குமரரும், கன்னிமாடத்து மேடை மீதிருந்து அன்னங்கள் தடாகத்தில் விளையாடும் காட்சியைக் கண்டு களித்துக் கொண்டிருந்த சீதையைக் காண்கிறார்கள்.*

பொன்னின் சோதி, போதினின் நாற்றம் பொலிவே போல்,
தென் உண் தேனின் தீம் சுவை, செஞ்சொல் கவி இன்பம்,
கன்னி(ம்) மாடத்து உம்பரின் மாடே, கழிபேடோடு
அன்னம் ஆடும் முன்துறை கண்டு அங்கு அயல் நின்றார்.

*சீதை, களிக்கின்ற கண்களோடு, கல்லும் புல்லும் கண்டு உருகும்படி, பெண்ணின் நலமெல்லாம் கனிந்த கனியாக நிற்கின்றாள்.*

கொல்லும் வேலும், கூற்றமும் என்னும் இவை யெல்லாம்
வெல்லும், வெல்லும், என்ன மதர்க்கும் விழிகொண்டாள்,

(சொல்லும் தன்மைத்து அன்று அது!) குன்றும், சுவரும், திண்
கல்லும், புல்லும் கண்டு உருகப் பெண் கனி நின்றாள்.

*(மதர்க்கும் – களிக்கும்.)*

*அவள் அணிந்திருந்த அணிகள் ஒன்றும் அவளுக்கு அழகு செய்யவில்லை. ஆனால் அந்த அணிகள் சீதை யால் அணியப்படும் பாக்கியம் பெற்ற காரணத்தால் மிகுந்த அழகு பெற்றுப் பிரகாசித்தன.*

இழைகளும் குழைகளும் இன்ன, முன்னமே
மழை பொரு கண் இணை மடந்தைமாரொடும்
பழகிய எனினும், இப் பாவை தோன்றலால்,
அழகு எனும் அதுவும் ஓர் அழகு பெற்றதே!

(இழை – பெரிய அணிகள். குழை – குண்டலம். மழை பொரு – குளிர்ச்சி பொருந்திய. இன்ன – இவைகள்.)

*இப்படிப்பட்ட அழகும் நலமும் ஒருங்குவாய்ந்த சீதையும் இராமனும் ஒருவரையொருவர் பார்த்து விடுகிறார்கள். கண்கள் மட்டும் சந்தித்தன என்று சொல்வதற்கில்லை, உள்ளமும் ஒன்றை யொன்று நாடிக் கலந்து விடுகின்றன. ஒருவருடைய மனத்திலே மற்றொருவருடைய மனது புகுந்து விடுகிறது.*

எண் அரும் நலத்தினாள் இனையள் நின்றுழி,
கண்ணொடு கண் இணை கவ்வி, ஒன்றை ஒன்று
உண்ணவும், நிலைபெறாது உணர்வும் ஒன்றிட,
அண்ணலும் நோக்கினார்; அவளும் நோக்கினாள்.

பருகிய நோக்கு எனும் பாசத்தால் பிணித்து
ஒருவரை ஒருவர் தம் உள்ளம் ஈர்த்தலால்,

வரிசிலை அண்ணலும் வாள் - கண் நங்கையும்,
இருவரும் மாறிப் புக்கு இதயம் எய்தினர்.

*பாற்கடலில் ஒன்றாயிருந்த திருமாலும் இலக்குமியும், சிறிது காலம் உலக சம்ரக்ஷணார்த்தம் பிரிந்திருந்து, இன்று மறுபடியும் கூடிவிட்டார்கள், என்று சொல்லும்படியாகத்தான் சீதா ராமர் சந்திப்பு இருந்தது.*

மருங்கு இலா நங்கையும், வசை இல் ஐயனும்,
ஒருங்கிய இரண்டு உடற்கு உயிர் ஒன்றாயினர்:
கருங்கடல் பள்ளியில் கலவி நீங்கிப் போய்ப்
பிரிந்தவர் கூடினால் பேசல் வேண்டுமோ?

*இப்படி இராமனும் சீதையும் சந்தித்த பின்னர், இராமன் விசுவாமித்திர முனிவருடன் சென்று சீதையின் பார்வையிலிருந்து மறைந்து விட்டான். இராமனைப் பார்த்த சீதை அப்படியே அவசரமுற்று விடுகிறாள். சீதையின் மனமாகிய மதயானையும் நிறையென்ற தோட்டிக்கு அடங்காது நிமிர்ந்து போய் விடுகிறது.*

பிறை எனும் நுதலவள் பெண்மை எனப்படும்?
நறை கமழ் அலங்கலான் நயன கோசரம்
மறைதலும், மனம் எனும் மத்த யானையின்
நிறை எனும் அங்குசம் நிமிர்ந்து போயதே!

*(பெண்மை – பெண்களுக்குரிய அடக்கம். நறை – வாசனை. நயன கோசரம் – கண்ணுக்குத் தெரிதல். நிறை – கற்பு.)*

*இராமனைப் பிரிந்த சீதை தனித்துப் புலம்புகிறாள்:*

'நெருக்கி உள் புகுந்து, அரு நிறையும் பெண்மையும்
உருக்கி, என் உயிரொடும் உண்டு போனவன்
பொருப்பு உறழ் தோள் புணர் புண்ணியத்தது
கரும்பு வில் அன்று: அவன் காமன் அல்லனே!

*(பொருப்பு உறழ் – மலை போன்ற. கரும்பு வில் – கரும்பு வில்.)*

'பெண் வழி நலனொடும், பிறந்த நாணொடும்,
எண் வழி உணர்வும், நான் எங்கும் காண்கிலேன்:
மண் வழி நடந்து, அடி வருந்தப் போனவன்
கண் வழி நுழையும் ஓர் கள்வனே கொல், ஆம்?

*( எண் வழி உணர்வு – எண்ணிப் பார்த்துத் தெரிந்து கொள்ளும் அறிவு, பகுத்தறிவு.)*

'இந்திர நீலம் ஒத்து இருண்ட குஞ்சியும்,
சந்திர வதனமும், தாழ்ந்த கைகளும்,
சுந்தர மணிவரைத் தோளுமே அல -
முந்தி என் உயிரை அம் முறுவல் உண்டதே!'

(இந்திர நீலம் – நீல ரத்தினம். குஞ்சி – ஆண் மக்கள் தலைமயிர்.)

*இப்படிச் சீதை இராமனை உருவெளித் தோற்றத்திலே கண்டு கண்டு வருந்திக் கொண்டிருக்கும்போது, பொழுதும் அஸ்தமித்து விடுகின்றது. செவ்வானமாகிய சிவந்த தலைமயிரும், இருளாகிய கருநிறமும் கொண்ட காலன், தென்றலாகிய பாசத்தை வீசிக் கொண்டு வந்தது போல, மாலைப் பொழுதும் வந்து சேருகின்றது. சீதையின் தாபமோ அதிகமாகின்றது. இந்த நிலையிலே சந்திரனும் நீலக் கடலில் உதித்து, தன்*

*குளிர்ந்த கிரணங்களைப் பலவிடத்தும் வீசுகிறான். நிலவொளியும் வெண்ணெய் அண்ணலான சடையப் பரது புகழ் போல எங்கும் பரவுகின்றது.*

வண்ண மாலைக் கை பரப்பி
உலகை வளைந்த இருள் எல்லாம்
உண்ண எண்ணித் தண் மதியத்து
உதயத்து எழுந்த நிலாக் கற்றை,
விண்ணும் மண்ணும் திசை அனைத்தும்
விழுங்கிக் கொண்ட விரி நல் நீர்ப்
பண்ணை வெண்ணெய்ச் சடையன்தன்
புகழ் போல் எங்கும் பரந்துளது, ஆல்.

*(வண்ணம் – நிறம். பண்ணை வெண்ணெய் – வயல்கள் சூழ்ந்த திருவெண்ணெய் நல்லூர்.)*

*நிலவின் ஒளி குளிர்ந்ததாக இருந்தாலும், காதல னைப் பிரிந்த சீதைக்கு வெப்பத்தையே கொடுக்கிறது. 'கரு நெருப்பிடையே பிறந்த வெண்ணெருப்பே!' என்றெல்லாம் அவள் சந்திரனைப் பழிக்கின்றாள். அவளுடைய தேகத்தின் வெம்மையைத் தாங்காது, அவளது படுக்கையில் விரித் திருந்த தாமரை மலரும் வெதும்பிற்று. தோழியர், அவளுடைய வெப்பத்தைத் தணிக்கச் சந்தனத்தை அள்ளி அள்ளி அவள் உடலில் பூசுகிறார்கள். இதனாலெல்லாம் வெப்ப நோய் குறைந்து போய் விடுமா? மற்ற நோய்களுக் கெல்லாம் மருந்திருத்தல் போல, ஆசை நோய்க்கு மருந்தும் உண்டா?*

வாச மென் கலவைக் களி வாரி, மேல்
பூசப் பூசப் புலர்ந்து புழுங்கினள்:

வீச வீச வெதும்பினள் மென் முலை:
ஆசை நோய்க்கு மருந்தும் உண்டு, ஆம் கொலோ?

(கலவைக் களி – வாசனைச் சாமான்கள் சேர்க்கப்பட்ட சந்தனக் குழம்பு.)

*இவ்வாறு சீதை வருந்திக் கொண்டிருக்கும் பொழுது, அவளைக் கன்னி மாடத்தில் கண்ட விசுவாமித்திரர் ராம், லக்குமணர்கள், சனக மன்னனைக் காண, அவன் அவர்களை மிக்க பரிவுடன் வரவேற்று உபசரித்து, சிறந்த மாளிகையொன்றில் அமரச் செய்தான். அங்கே கௌதம முனிவருடைய புத்திர னாகிய சதாநந்தன் வந்து சேர்ந்தான். அம்முனிவனை இராமன் வணங்க, அவன் இராமனுக்கு ஆசி கூறி, விசுவாமித்திரரை உபசரித்தான். விசுவாமித் திரரும், இராமன் தாடகை வதம் முடித்ததையும், தம் யாகம் நிறைவேறியதையும், சதாநந்தன் தாயாராகிய அகலிகையின் சாப விமோசனம் ஆனதையும் எடுத்துக் கூறி, அவன் பெருமையைப் பலபடப் பாராட்டிப் பேசினார்:*

'வடித்த மாதவ, கேட்டி! இவ்வள்ளல்தான்
இடித்த வெங்குரல் தாடகை யாக்கையும்,
அடுத்து என் வேள்வியும், நின் அன்னை சாபமும்
முடித்து, என் நெஞ்சத்து இடர் முடித்தான்' என்றான்,

*(வடித்த – திருந்திய. கேட்டி – கேட்பாயாக.)*

*இப்படி விசுவாமித்திரர் கூறியதைக் கேட்ட சதாநந் தன், 'உம்முடைய அருளைப் பெற்ற வீரர்களுக்குச் செய்வதற்கு அரியது என்று ஏதாவது காரியம் உண்டா?' என்று முனிவரது அருள் வலியைப்*

*பாராட்டினான். இராமனுக்கு முனிவரது பெருமையை எடுத்துரைக்கும் வியாசமாக, அவர் அரசராயிருந்தது, பின்னர் வசிட்டரிடம் காமதேனுவைக் கேட்டு அவர் கொடாததால் அவரோடு பகைமை கொண்டு போர் செய்தது, விசுவாமித்திரரது படை வலிமையெல்லாம் வசிட்டர் தவ மகிமையின் முன்னால் வலியற்றுப் போனது, பின்னர் அவரும் அத்தகைய எஞ்சாத பலம் அடையத் தவம் செய்தது, அதனால் பெருமை பெற்றது முதலான விசுவாமித்திரரது வாழ்க்கையையே விரிவாக எடுத் துரைத்து, அவரிடம் வில்வித்தை பயிலும் பாக்கியம் பெற்ற இராமனையும் வாழ்த்திப் பின் தன் இருப்பிடம் சென்றான்.*

*இராமனைப் பிரிந்த சீதைதான் தாபத்தால் வருத்த முற்றாள் என்றால், இராமனும் அவ்வாறே, அவளைக் கண்டு பின் பிரிந்ததால் பெரிய ஏக்கமுறுகிறான். இரவெல்லாம் எப்பொழுதும் அவனுக்குச் சீதையின் ஞாபகந்தான்; கண்ட கண்ட இடமெல்லாம் அவனுக்குச் சீதையின் உருவே தென்படுகின்றது.*

முனியும் தம்பியும் மொய்ம் முறையால் தமக்கு
இனிய பள்ளிகள் எய்திய பின், இருள்
கனியும் போல்பவன், கங்குலும், திங்களும்,
தனியும், தானும், அத்தையலும் ஆயினான்.

*(மொய்ம் முறை – மிக உயர்ந்த முறை. இருள் கனியும் போல் பவன் – மிக இருண்ட நிறத்தினன். கங்குல் – இரவு.)*

விண்ணில் நீங்கிய மின் உரு, இம் முறை
பெண்ணின் நல் நலம் பெற்றது உண்டே, கொலோ?

எண்ணின், ஈது, அலது, என்று அறியேன்: இரு
கண்ணினுள்ளும் கருத்தினும் காண்பன், ஆல்!'

*(இம்முறை – இப்படிப்பட்ட)*

*இப்படிச் சீதையை நினைந்து நினைந்து சிந்தை நொந்த இராமனது உள்ளத்தில் ஒரு சந்தேகம் தோன்றுகிறது: 'ஆம், நான் கன்னி மாடத்துக் கண்ட பெண், கன்னியா, அல்லது மணம் முடிந்த மங்கையா? மணம் முடிந்த மங்கையாயிருந்தால் எத்தகைய பெரிய தவறு செய்து விட்டேன்? ஒருநாளும் தவறான வழியில் செல்லாத என் மனம் இன்று தவறான வழியில் செல்லுமா? ஒருபோதும் அவள் மணம் முடிந்த பெண்ணாயிருக்க முடியாது. என் உள்ளம் கவர்ந்த காரிகை கன்னியே!' என்றெல்லாம் நினைக்கிறான் இராமன்.*

'ஏகும் நல் வழி: அல் வழி என் மனம்
ஆகுமோ? அதற்கு ஆகிய காரணம்,
பாகு போல் மொழிப் பைந்தொடி கன்னியே
ஆகும்; வேறு இதற்கு ஐயுறவு இல்லையே!'

*இரவு கழிந்தது, பொழுது புலர்ந்தது. கீழ்வானமாகிய அரங்கத்திலே பாலசூரியன் உதயமாகிறான். பிரிந்து சென்ற காதலர் வரவு கண்டு மகிழும் காதலிகள் போலப் பொய்கையிலே தாமரை மலர்கள் விரிந்து அழகுடன் விளங்குகின்றன. எங்கு பார்த்தாலும் வேத கோஷம்; கின்னரர்களது இசைபாடல்; சமுத்திரமாகிய மத்தளமோ அதிர்கின்றது. கடல் அலைகளிலே மிதந்து வரும் சூரியன், சிதாகாசத்திலே ஆனந்த நர்த்தமிடும் நடராஜனைப் போலவே காட்சியளிக்கிறான்.*

எண்ணரிய மறையினொடு கின்னரர்கள்
இசைபாட, உலகம் ஏத்த,
விண்ணவரும், முனிவர்களும், வேதியரும்
கரம் குவிப்ப, வேலை என்னும்
மண்ணும் அணி முழவு அதிர, வான் அரங்கின்
நடம்புரி வாள் இரவியான
கண்ணுதல் வானவன் கனகச் சடை விரிந்தால்
என, விரிந்த கதிர்கள் எல்லாம்.

*(எண்ணரிய – அளவில்லாத. உலகம் – உயர்ந்தோர். வாள் இரவி – ஒளி பொருந்திய சூரியன். கண் நுதல் வானவன் – ஒரு கண்ணை நெற்றியிலே உள்ள சிவன். கனகச் சடை – பொன் நிறச் சடை.)*

சூரியோதயத்தில் நித்திரை நீங்கி எழுந்த இராமன் காலைக்கடன்களை முடித்துவிட்டு, விசுவாமித்திரர், இலக்குவன் இவர்களுடன் மிதிலை மன்னனது வேள்விச்சாலை சென்று சேர்கிறான். சனகனும் வேள்வி முடிந்தவுடன், தன் சபாமண்டபத்திற்குச் சென்று, அங்கே தன் பக்கத்திலே இராம லக்குமணரை இருக்கச் செய்து, முனிவரோடு வீற்றிருந்தான். சனகன் முனிவரை வணங்கி, அவ்விளங்குமரர் யாவர் என்று சொல்லும்படி வேண்ட, முனிவரும், 'இவர் ரகுகுலத்து அரசனான தசரதன் புத்திரர்; உன்னுடைய வேள்வி காண வந்தார்கள்; உன்னுடைய சிவதனுசையும் ஒரு கை பார்ப்பார்கள்' என்பதை மிகவும் வினயமாகக் கூறினார்.

இருந்த குலக் குமரர் தம்மை இரு கண்ணும்
முகந்து அழகு பருக நோக்கி,

அருந்தவனை அடி வணங்கி, 'யாரை இவர்?
உரைத்திடுமின், அடிகள்!' என்ன,
'விருந்தினர்கள்; நின்னுடைய வேள்வி
காணிய வந்தார்; வில்லும் காண்பார்;
பெரும் தகைமெய்த் தயரதன் தன் புதல்வர்' என
அவர் தகைமை பேசலுற்றான்.

*(அடிகள் – தேவரீர். காணிய– காண. தகைமை – பெருமை)*

## 13. விசுவாமித்திரர் இராமனது குலமரபு கூறுவது

*'ஸ்ரீரங்கத்திலே பரஞ்சோதியாகிய ரங்கநாதனைக் கொண்டுவந்து பிரதிட்டை செய்த இக்ஷ்வாகு என்ற அரசன் வழி வந்தவன் தசரதன். இவர்கள் குல முன்னவர்களில் ஒருவனான சிபிச் சக்கரவர்த்தி, தான் அடைக்கலம் கொடுத்த புறாவுக்காகத் தன் உயிரையே கொடுத்தான் என்ற புகழ் உலகம் அறியாததா?' என்று விசுவாமித்திரர் இராமனது குலப்பெருமையை விரிவாக எடுத்து உரைக்கிறார்:*

'இன் உயிர்க்கும் இன் உயிராய்
இரு நிலம் காத்தார் என்று
பொன் உயிர்க்கும் கழலவரை
யாம் போலும் புகழ்கிற்பாம்!
மின் உயிர்க்கும் நெடு வேலோய்!
இவர் குலத்தோன், மேல், பறவை
மன் உயிர்க்குத் தன் உயிரை
மாறாக வழங்கினன், ஆல்!

*(பொன் – அழகு, உயிர்க்கும் – விளக்கும். கழலவரை – வீரக்கழல் அணிந்த அரசர்களை. மேல் – முன்காலத்தில். மாறாக – ஈடாக.)*

*'இத்தகைய குலத்திலே, தசரதனது புதல்வர்களாய் இராமர், இலக்குமணர், பரதர், சத்துருக்கனர் என்று நான்கு குமாரர்கள் தோன்றினார்கள்.*

'விரிந்திடு தீவினை செய்த வெவ்விய தீவினையாலும்,
அருங் கடை இல் மறை அறைந்த அறம் செய்த அறத்தாலும்,
இருங் கடகக் கரதலத்து எழுது அரிய திருமேனிக்
கருங் கடலைச் செங்கனி வாய்க் கவுசலை என்பாள்
பயந்தாள்

*(வெவ்விய தீவினை – கொடிய பாவம். கடகம் – வளையல். கரதலம் – கை. பயந்தாள் – பெற்றாள்.)*

'தள்ள அரிய பெரு நீதித் தனி ஆறு புக மண்டும்
பள்ளம் எனும் தகையானை, பரதன் எனும் பெயரானை,
எள் அரிய குணத்தாலும் எழிலாலும் இவ்விருந்த
வள்ளலையே அனையானைக் கேகயர்கோன் மகள்
பயந்தாள்

*(தள்ள அரிய – விலக்குவதற்கு முடியாத. எழில் – அழகு.)*

*'இந்த நான்கு குமாரர்களும், கல்வி கேள்விகளில் சிறந்தவர்களாயும், தனுர்வேதம் நன்றாய்க் கற்றவர் களாயும் நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமு மாக வளர்ந்து வந்தார்கள்.*

'தலை ஆய பேருணர்வின் கலைமகட்குத் தலைவராய்,
சிலை ஆயும் தனு வேதம் தெவ்வரைப் போல் பணிசெய்ய
கலை ஆழிக் கதிர்த் திங்கள் உதயத்தில் கலித்து ஓங்கும்
அலை ஆழி என வளர்ந்தார் மறை நான்கும் அனையார்கள்.

*(பேருணர்வு – முதிர்ந்த அறிவு. தலைவராய் – மேம்பட்டவர்களாய். தெவ்வர் – பகைவர். கலித்து – ஒலித்து.)*

*'இவர்கள் நால்வரில் இருவரைத்தான் நான் என் வேள்வி காப்பதற்காகத் தசரதனிடம் யாசித்துப் பெற்று வந்தேன். வருகிற வழியில் எதிர்ப்பட்ட தாடகையை இராமன் தனது கன்னிப் போரில் வீழ்த்தி வெற்றி பெற்றான். அவனது வில் வன்மையை அங்குதான் கண்டு மகிழ வேண்டும்.*

'அலை உருவு அக்கடல் உருவத்து ஆண்தகைதன் நீண்டு
நிலை உருவப் புயவலியை நீ உருவநோக்கு, ஐயா! உயர்ந்த
உலை உருவக் கனல் உமிழ் கண் தாடகைதன் உரன் உருவி,
மலை உருவி, மரம் உருவி, மண் உருவிற்று ஒரு வாளி!

*'இவன் விட்ட அம்பு ஒன்றினால் தாடகை புத்திரரில் ஒருவனாகிய சுவாகு மாண்டு மடிந்தான். மற்றொரு புத்திரனான மாரீசனோ போன இடம் தெரியாது போய் ஒளிந்து கொண்டான். என் தவமும் நிறைவேறியது. நான் இவனுக்குக் கொடுத்த படைக்கலங்கள் எல்லாம், நானும் நாணும்படி அவனுக்கு ஏவல் செய்கின்றன. இன்னும் இவன் பாதத் தூளியால் அகலிகை சாப விமோசனம் பெற்றது இவன் மகிமையை நன்றாக வெளிப்படுத்தவில்லையா?' என்றெல்லாம் சொல்லி முடித்தார் விசுவாமித்திரர்.*

'கோதமன்தன் பன்னிக்கு
முன்னை உருக் கொடுத்தது, இவன்
போது நின்றது எனப் பொலிந்த
பொலன் கழல் கால் பொடி, கண்டாய்!
காதல் என்தன் உயிர் மேலும்
இக் கரியோன் பால் உண்டு, ஆல்!
ஈது இவன்தன் வரலாறும்
புயவலியும்!' என உரைத்தான்.

## 14. இராமன் வில்லொடித்தது!

இராமன் பெருமையை முனிவர் எடுத்துக் கூறியதைக் கேட்ட சனகன், 'ஐயோ! இவ்வளவு அழகு வாய்ந்த வீரனுக்கு, ஜானகியை மணம் முடித்துக் கொடுத்து விடலாமே! இப்படி விரைவிலே மணம் முடிப்பதற்கு இடையூறாக அல்லவா இந்த வில் ஒன்று இருக்கிறது! இந்த வில்லை வளைப்பவனுக்கே இவள் உரியவள் என்ற பணயம் மட்டும் குறிப்பிடாதிருந்தோ மில்லையே!' என்று சிந்தித்து மனம் உளைகிறான். இவ்வாறு தழைக்கின்ற உள்ளத்தோடு, இராமனைப் பார்க்கிறான் ஒரு தடவை, வில்லைப் பார்க்கிறான் ஒரு தடவை, தன் மகள் சீதையை நினைக்கிறான் ஒரு தடவை. அவன் உள்ளத்தில் எழுகின்ற சிந்தனைகளை யெல்லாம் ஊகித்துணர்கிறான் சதாநந்தன். அவன், வில்லினது பெருமையையும், அது சனகனிடம் வந்த வரலாற்றையும், வில்லை வளைப்பவனுக்கே சீதையை மணம் முடித்துக் கொடுப்பதாகச் சனகன் ஏற்படுத்தி யுள்ள நியமத்தையும் விரிவாக எடுத்துரைக்கிறான்.

போதகம் அனையவன் பொலிவு, நோக்கி, அவ்
வேதனை தருகின்ற வில்லை நோக்கி, தன்
மாதினை நோக்குவான் மனத்தை நோக்கிய
கோதமன் காதலன், கூறல் மேயினான்.

*(போதகம் – யானைக் கன்று)*

*சதாநந்தன் சொல்லுகிறான்: 'தக்கன் உமா தேவியை அவமதித்த பொழுது, சிவனுடைய அம்சனான வீரபத்திரன் இவ்வில்லுடனே தோன்றி, அவன் யாகசாலை சேர்ந்து, அவனையும் அவனுக்குத் துணையாயிருந்த தேவர்களையும் முறியடித்து விரட்டி விட்டு, தன் கோபம் தணிந்தவுடனே, இவ்வில்லை இந்தச் சனகனது முன்னோன் ஒருவனிடம் கொடுத்து வைத்திருந்தான். இந்த வில் சனகனிடம் இருக்கும் போது, ஒருநாள், நாங்கள் யாகம் செய்ய நிலத்தைச் சுத்தப்படுத்துவதற்காகப் பொற் கலப்பையினால் உழுதோம். உழுத கொழுவின் முனையிலே இந்தச் சீதை தோன்றினாள்.*

'உழுகின்ற கொழுமுகத்தின் உதிக்கின்ற கதிரின் ஒளி
பொழிகின்ற புவி மடந்தை உரு வெளிப்பட்டென, புணரி
எழுகின்ற தெள் அமுதோடு எழுந்தவளும் இழிந்து ஒதுங்கித்
தொழுகின்ற நல் நலத்துப் பெண்அரசி தோன்றினாள்.

*(உதிக்கின்ற கதிர் – உதய சூரியன். புணரி – கடல். இழிந்து – இழிவடைந்து. நல் நலம் – மிக்க அழகு.)*

'குணங்களை என் கூறுவது?
கொம்பினைச் சேர்ந்து அவை உய்யப்
பிணங்குவன; அழகு இவளைத்
தவம் செய்து பெற்றது, காண்!
கணம் குழையாள் எழுந்ததன் பின்,
கதிர் வானில் கங்கை யெனும்
அணங்கு இழியப் பொலிவு அழிந்த
ஆறு ஒத்தார் வேறு உற்றார்.

*(உய்ய – வாழ்வு பெற. பிணங்குவன – சண்டை செய்தன. கணம் – திரட்சியான. குழை – குண்டலம், அணங்கு – தெய்வப் பெண் ஆகிய கங்கை.)*

'நீரிலே பிறந்த திருமகளை விண்ணவர் எல்லாரும் காதலித்தது போல, நிலத்திலே பிறந்த இந்தத் திருமகளையும் மன்னரெல்லோரும் காதலித்து மணம் பேசி வந்தார்கள். நாங்களோ அவர்களுக்கு, 'இவ் வில்லை வளைத்தவர்களே இவளை மணக்கத் தகுதி யுடையவர்' என்று சொல்லிவிட்டோம். அம்மன்னர் களாலோ வில்லை வளைக்க முடியவில்லை. சனக னுடன் போர் செய்து வெல்லவோ திறனில்லை. வந்த வர் எல்லோரும் தோற்றோடிப் போய் விட்டார்கள்.

'அன்று முதல் இன்று அளவும் ஆரும் இந்தச் சிலையருகு
சென்றும் இலர்; போய் ஒளித்த தேர் வேந்தர்திரிந்தும் இலர்;
என்றும் இனி மணம் இல்லை என்று இருந்தோம்; இவன் ஏற்றின்
நன்று, மலர்க் குழல் சீதை நலம் பழுதாகாது' என்றான்.

*(திரிந்தும் இலர் – திரும்பி வரவில்லை. ஏற்றின் – நாண் ஏற்றினானானால். நலம் – அழகு)*

இவ்வாறு சதாநந்தன் கூறியதை யெல்லாம் கேட் டார் விசுவாமித்திரர். தமது சீடனான இராமன் இப்பணயத்தில் எப்படியும் வெற்றி பெற்று விடுவான் என்று நம்பினார். அந்தப் பெருமிதத்துடனே இராமனை ஏறிட்டு நோக்கினார். உடனே இராமனும், முனிவர் நினைத்ததையெல்லாம் குறிப்பால் தெரிந்து கொண்டு, அவ் வில்லை நோக்கினான்.

நினைந்த முனி பகர்ந்த எலாம்
நெறி உன்னி, அறிவனும் தன்

புனைந்த சடை முடி துளக்கி,
　　போர் ஏற்றின் முகம் பார்த்தான்:
வனைந்தனைய திருமேனி
　　வள்ளலும், அம் மாதவத்தோன்
நினைந்த எலாம் நினைந்து, அந்த
　　நெடும் சிலையை நோக்கினான்.

*(முடி துளக்கி – தலையை அசைத்து. வனைந்தனைய – சித்திரத்தில் எழுதினால் போன்ற.)*

*சதாநந்தன் கூறியதை யெல்லாம் கேட்ட சபையோர், 'இதென்ன நியாயமற்ற காரியம்? சீதையை இராமனுக்கு மணம் முடித்துக் கொடுக்க வேண்டுமென்று விரும்பி னால், "அப்பா, பிடி!" என்று சீதையைப் பிடித்து இராமனிடம் கொடுத்து மணத்தை முடித்து விடாமல், இத்தகைய ஒரு பெரிய வில்லை எடுத்து இந்தச் சிறு பிள்ளை முன் வைத்து, "இதை வளைத்துப் பார், தம்பி!" என்று சொல்வது எவ்வளவு அறிவற்ற காரியம்!" என்று பலவாறு பேச ஆரம்பித்து விடுகிறார்கள்.*

'வள்ளல் மணத்தை மகிழ்ந்தனன் என்றால்,
"கொள்" என முன்பு கொடுப்பதை அல்லால்,
வெள்ளம் அணைத்தவன் வில்லை எடுத்து இப்
பிள்ளை முன் இட்டது பேதைமை!' என்பார்.

*(வெள்ளம் – கங்கை நீர். அணைத்தவன் – தலையில் ஏந்தியவன்.)*

*இப்படி எல்லோரும், இராமனது இளமையையும் வில்லினது வலிமையையும் சிந்தித்துக் கொண்டிருக் கும்போதே, இராமன் எழுந்தான்; வில்லருகே*

*சென்றான்; சீதைக்குத் தான் அணியப்போகும் மண மாலையை எவ்வளவு எளிதாகவும் அலக்ஷியமாகவும் எடுப்பானோ அப்படியே அதை எடுத்தான்.*

ஆடக மால் வரை அன்னது தன்னைத்
தேடு அரும் மாமணி சீதை எனும், பொன்
சூடக வால் வளை சூட்டிட நீட்டும்
ஏடு அவிழ் மாலை இது என்ன எடுத்தான்.

*(ஆடகம் – பொன். மால் – பெரிய. சூடகம் – ஒரு கையணி. வால் வளை – வெண்ணிறச் சங்கு வளையல்)*

*வில்லை எடுத்ததைத்தான் சபையிலுள்ளவர்கள் பார்த்தார்கள்; உடனே வில்லொடித்த சத்தத்தைத்தான் அவர்கள் கேட்டார்கள். வில்லைக் கையிலே எடுத்த வன், வில்லின் முனையைக் காலின் பெருவிரலினால் எப்படி அழுத்தினான் என்பதையும், எப்படி வில்லை வளைத்து நாணை மற்றொரு முனையில் பூட்டினான் என்பதையும் ஒருவரும் பார்க்கவில்லை. காரணம்? அவ்வளவு விரைவிலே வில்லொடிந்து விட்டதுதான்.*

தடுத்து இமையாமல் இருந்தவர், தாளின்
மடுத்தது, நாண் நுதி வைத்தது, நோக்கார்:
கடுப்பினின் யாரும் அறிந்திலர்: கையால்
எடுத்தது கண்டனர், இற்றது கேட்டார்!

*(மடுத்தல் – அழுத்தல். கடுப்பு – விரைவு. இற்றது – ஒடிந்தது.)*

*வில்லொடிந்த ஓசை, சுவர்க்கம், மத்தியம், பாதலம் என்ற மூன்று உலகங்களிலும் சென்று இடித்தது. இனி சீதா கல்யாணம் நிறைவேறும் என்று எல்லோரும் குதூகலித்தார்கள்.*

பூ மழை சொரிந்தார் விண்ணோர்:
பொன் மழை பொழிந்த மேகம்:
பாமமார் கடல்கள் எல்லாம்
பல் மணி தூவி ஆர்த்த:
கோ முனிக் கணங்கள் எல்லாம்
கூறின ஆசி, 'கொற்ற
நாம வேல் சனகற்கு இன்று
நல்வினை பயந்தது!' என்னா.

*(பாமம் – நுரை. நாம வேல் – பகைவர்களுக்கு அச்சம் தரும் வேல். பயந்தது – பயனை அளித்தது. என்னா – என்று எண்ணி.)*

'இராமனுக்கு ஏற்ற பெண் சீதை யென்றால் சீதைக்கு ஏற்ற மாப்பிள்ளையும் ராமனேயாம். இத்தகைய ஒரு நல்ல மணவினையைக் காண்பதற்குத்தான் இவ்வுலகம் என்ன தவம் செய்துள்ளதோ! இராமனை இந்த நகருக்குக் கூட்டிவந்த முனிவனது பெருமைதான் என்ன!' என்றெல்லாம் நகர மக்கள் தங்கள் உள்ளத்தில் எழுந்த ஆனந்தத்தைப் பலவிதமாகச் சொல்லிச் சொல்லி மகிழ்ந்தார்கள்.

'நம்பியைக் காண நங்கைக்கு
ஆயிரம் நயனம் வேண்டும்!'
'கொம்பினைக் காணும் தோறும்
குரிசிற்கும் அன்னதேயாம்!'
'தம்பியைக் காண்மின்!' என்பார்:
'தவம் உடைத்து உலகம்!' என்பார்:
'இம்பர் இந்நகரில் தந்த
முனிவனை இறைஞ்சும்!' என்பார்.

*சனகனது அரச சபையிலே இப்படிப்பட்ட காரியம் நிகழ்ந்து கொண்டிருந்தபோது, சீதை தன் கன்னி மாடத்திலிருந்து, தான் முன்னர் கண்ட கட்டழகனையே நினைந்து நினைந்து புலம்புகிறாள். இராமன் ஏந்திய தனு, அந்தத் தனுவை ஏந்திய கைகள், அம்புப் புட்டிலைத் தாங்கிய தோள்கள், அகன்ற மார்பு முதலிய அவயவ சவுந்திரியத்தில் உள்ளம் பறி கொடுத்து விடுகிறாள்.*

'நாண் உலாவு மேருவோடு நாண் உலாவு பாணியும்
தூண் உலாவு தோளும், வாளி ஊடு உலாவு தூணியும்,
வாள் நிலாவின் நூல் உலாவு மாலை மார்பும், மீளவும்
காணலாகும் ஆகின், ஆவி காணலாகுமே, கொல், ஆம்!'

*(பாணி – கை. உலாவு – பூண்ட; பொருந்திய; போன்ற; நிறைந்த; அசைகின்ற.)*

*இவ்வண்ணம் சீதை உள்ளம் தளர்ந்து புலம்பிக் கொண்டிருக்கும் போது, இராமன் வில்லொடித்ததை நேரில் பார்த்த சீதையின் தோழியான நீலமாலை ஓடி வந்து, மிகுந்த மகிழ்ச்சியுடன், 'முனிவருடன் வந்த அரசிளங்குமரரில் முன்னவனான இராமன் வில்லை முறித்தான்!' என்று சீதையிடம் சொல்லுகிறாள். இந்த சந்தோஷச் செய்தியைக் கேட்ட சீதையின் உள்ளத்தில் என்ன என்னவோ எண்ணங்கள் எல்லாம் தோன்றுகின்றன. 'ஆம்! வில்லொடித்த வீரன், நான் முன்னர் கண்டு காதலித்த தலைவன்தானா? அல்லது வேறு ஓர் அரசிளங் குமரனா? ஒருவேளை நான் காதலித்த தலைவனாய் இல்லாவிட்டால், வில்லொடித்த காரணத்திற்காக மட்டும் இவனை மணம் புரிவதா?*

அது முடியக்கூடிய காரியமா?' என்று அங்கலாய்க்கிறாள். பின்னர், 'தோழி நீலமாலை சொல்லுகின்ற குறிகளால் "கோமுனியுடன் வரும் கொண்டல்" என்றபின், "தாமரைக் கண்ணினான்" என்ற தன்மையால், ஆம்! அவனே என் உள்ளங் கவர்ந்த கள்வன்' என்று ஒருவாறு ஐயம் நீங்குகிறாள். 'ஒருவேளை அவன் அல்லாது வேறு ஆளாக இருப்பின், இறந்து தீர்வதே தன் கடன் என்றுகூடத் தீர்மானித்து விடுகிறாள். சீதையின் நிலைமை இவ்வாறிருக்க, சனகன் இராமன் வில்லொடித்த தினால் மிகுந்த சந்தோஷமுற்று, விசுவாமித்திரரைக் கலந்து, நிகழ்ந்தவை அனைத்தையும் தசரதனுக்குத் தெரிவித்துவரத் தூதரை அனுப்பி, அவரிடம் மண ஓலையையும் கொடுத்தனுப்பினான்.

## 15. தசரதன் பரிவாரங்களுடன் மிதிலைக்குப் புறப்படல்

*சனகன் அனுப்பிய தூதர், அயோத்தியை அடைந்து, இராமன் தசரதனைப் பிரிந்து முனிவருடன் சென்றபின் செய்த அரிய செயல்களையெல்லாம் விரிவாய் எடுத்துக் கூறி, மிதிலையில் வில்லொடித்ததையும் சொல்லி, அரசன் கொடுத்த திருமுகத்தையும் சமர்ப்பித் தனர். மண ஓலை வாசிக்கக் கேட்ட மன்னவன், அப்படியே பூரித்து, தன் சேனைப் பரிவாரங்களுடன் மிதிலைக்குப் புறப்பட்டான். சேனாவீரர் தாங்கிச் செல்லும் வெண் குடைகள், கொடிச் சீலைகள் எல்லாம் வானத்தை நிறைத்து விடுகின்றன. சேனைத் தலைவர் அணிந்திருந்த ஆபரணங்களின் பிரகாசமும், சேனாவீரர் முழக்கும் பேரிகை ஒலியும், மின்னி இடிப்பதுபோல் இருக்கின்றன. சேனையோடு செல் லும் மாதர்கள் கூட்டத்திற்கும் குறைவில்லை. சேனைத் தொகுதியைச் சொல்ல வேண்டுமென்றால், தசரதன் தன் இருக்கையை விட்டு எழுவதன் முன்னமேயே சேனையின் முன்னணி மிதிலை சென்று சேர்ந்து விட்டது எனலாம்.*

உழுந்து இட இடம் இலை உலகம் எங்கணும்!
அழுந்திய உயிர்க்கு எலாம் அருள் கொம்பு ஆயினான்
எழுந்திலன்: எழுந்து இடைப் படரும் சேனையின்
கொழுந்து போய்க் கொடி மதில் மிதிலை கூடிற்றே!

*இப்படிச் சென்ற தசரதனது சேனா வீரரும் பிறரும் சந்திர சைலச் சாரலைச் சார்ந்து அங்குள்ள மலை வளங்களைக் கண்டு களிக்கிறார்கள். இவ்வீரர் ஓட்டிய தேரின் பொன் சக்கரங்கள் உருண்டு உருண்டு கருங்கல் பாறைகளும் பொன்னிறமாகி விடுகின்றன. காலாள், குதிரை, யானை முதலிய படைகள் செல்வதினால் எழுந்த தூசி படிந்த மாதர் மேனியை அவர்களது காதலர் வெண்ணிற ஆடை கொண்டு துடைத்தது, மாசு படிந்த ஓவியத்தைப் புதுக்கியது போல் இருந்தது.*

மிதிக்க நிமிர் தூளியின் விளக்கம் அறும் மெய்யை
சுதைக் கண் நுரையைப் பொருவு தூசு கொடு தூசை
உதிர்த்தனர் இளங் குமரர்: ஓவியர், இன் ஓவம்
புதுக்கினர் என, தருண மங்கையர் பொலிந்தார்.

(தூளி – தூள். சுதை – பால். தூசு – ஆடை. ஓவம் – சித்திரம். தருணம் – இளமை.)

*மாதர்கள் குயிலொடு பேசியும், மலையொடு கூவி எதிர் ஒலி கேட்டும், மயில் போலத் திரிந்தார்கள். மைந்தர்களோ, தங்களுடைய வீரக்கழல் சப்திக்கும் படியும், அரையிலே வாளும் தோளிலேயுள்ள வாகுவலயமும் பிரகாசிக்கும்படியும், அங்குமிங்கும் திரிந்து மலைக்காட்சிகளை அனுபவித்தார்கள். இப்படி இவர்கள் இம்மலையிலே தங்கியிருந்த பொழுது மாலை நேரம் வந்தது. மாலை நேரம் கழியும் போது, இவர்கள் மலையினின்றும் கீழே இறங்கினார் கள். இரவெல்லாம் ஒரே களியாட்டம்தான். மாதர் களுடைய ஆடலும் பாடலும் மைந்தர்களுக்கு அளவிறந்த உற்சாகத்தை உண்டாக்கின.*

மண்ணும் முழவின் ஒலி, மங்கையர் பாடல் ஓதை,
பண்ணும் நரம்பில் பயிலா இசை, பாணி ஓதை,
கண்ணும் உடை வேய் இசை, கண்ணுளர் ஆடல்தோறும்
விண்ணும் மருளும்படி விம்மி எழுந்தது, அன்றே!

(ஓதை – ஓசை. கண் – கணுக்கள். வேய் – மூங்கில், கண்ணுளர் – நாடகமாடுவோர்.)

*இரவும் கழிந்தது; பொழுதும் விடிந்தது. பின்பு சேனை புறப்பட்டு, சோணையாற்றங்கரையை அடைந்தது. உச்சி நேரத்தில் பூக் கொய்யவும், நீராடவும் விரும்பி, மைந்தரும் மாதரும் தடாகங்கள் நிறைந்த ஒரு சோலையைச் சேர்ந்தார்கள். அந்தச் சோலையிலே யுள்ள செடி கொடிகளை மாதர்கள் தம் கைகளால் மெல்லெனத் தீண்டியபோது, அக்கொம்புகள் தாழ்ந்து அவர் தம் பாதங்களில் மலர் சொரிந்து வணங்கின. இப்படிப் பூங்கொம்புகளே இவர்களை வணங்கினால், மற்ற ஆடவர்கள் இவர்களை வணங்குதலுக்குக் கேட்பானேன்!*

நஞ்சினும் கொடிய நாட்டம்
அமுதினும் நயந்து நோக்கி,
செம் செவே கமலக் கையால்
தீண்டலும், நீண்ட கொம்பர்
தம் சிலம்பு அடியில் மென் பூச்
சொரிந்து உடன் தாழ்ந்த என்றால்,
வஞ்சிபோல் மருங்குலார் மாட்டு
யாவரே வணங்கலாதார்!

*இப்படிப் பூப்பறிக்கும் இடத்தில் நடந்த காதல் நிகழ்ச்சிகளோ அனந்தம்.*

'போர்' என்ன வீங்கும் பொருப்பு அன்ன
பொலம் கொள் திண் தோள்
மாரன் அனையான், மலர் கொய்து
இருந்தானை, வந்(து) ஓர்
கார் அன்ன கூந்தல் குயில் அன்னவள்
கண் புதைப்ப,
'ஆர்?' என்னலோடும், அனல் என்ன
அயிர்த்து உயிர்த்தாள்.

(பொலம் – அழகு. அயிர்த்து உயிர்த்தாள் – பெருமூச்செறிந்தாள்)

யாழ் ஒக்கும் சொல் பொன் அனையாள், ஓர் இகல் மன்னன்
தாழத் தாழாள், தாழ்ந்த மனத்தாள், தளர்கின்றாள்,
ஆழத் துள்ளும் கள்ளம் நினைப்பாள், அவன் நின்ற
சூழற்கே தன் கிள்ளையை ஏவித் தொடர்வாளும்.

(ஓர் இகல் மன்னன் – ஒப்பற்ற வலிமையுடைய அரசன், தாழத் தாழாள் – தன்னை வணங்கிய போதும் மனம் இளகாதவள். ஆழத்துள்ளும் – ஆழ்ந்த மனத்துள்ளும். கள்ளம் – சூழ்ச்சி.)

*பூக்கொய் விளையாட்டு முடிந்ததும், மைந்தரும் மாதரும் தடாகங்களில் இறங்கி நீர் விளையாட்டை ஆரம்பித்து விடுகிறார்கள். காதலன் காதலியர் ஒருவர் மேலொருவர் வாசனைப் பொடிகளை வீசி, பூமாலை கொண்டடித்து, நீரை அள்ளி இறைத்து விளையாடு வாராயினர்.*

வண்டு உணக் கமழும் சுண்ணம்,
வாச நெய், நானத்தோடும்

கொண்டு எதிர் வீசுவாரும்;
　　கோதை கொண்டு ஓச்சுவாரும்;
தொண்டை வாய்ப் பெய்து, தூநீர்
　　கொழுநர் மேல் தூகின்றாரும்;
புண்டரீகக் கை கூப்பி,
　　புனல் முகத்து இறைக்கின்றாரும்.

(நானம் – கஸ்தூரி. கோதை – பூச்செண்டு. தூகின்றார் – தூவுகின்றவர். புனல் – நீர்.)

*இப்படி யெல்லாம் நீர் விளையாட்டு நிகழ்கின்றது. இவ்வாறு ஆடவரும் பெண்டிரும் நீராடியதைக் கண்டு, தானும் நீராட விரும்பினவன் போல், சூரியனும் மேல் திசைக் கடலிலே விழுந்து அஸ்தமித்தான். வான வீதியிலே சந்திரனும் தோன்றித் தன் கிரணங்களை, ஆறு, கடல், மலை முதலிய எல்லா இடத்தும் வீசி, இயற்கையின் எல்லாப் பொருள்களையும் வெண்ணிற மாக்கிவிட்டான்.*

ஆறு எலாம் கங்கையே ஆய; ஆழிதாம்
கூறு பால் கடலையே ஒத்த; குன்று எலாம்
ஈறு இலான் கயிலையை இயைந்த; என் இனி
வேறு யாம் புகல்வது நிலவின் வீக்கமே!

(இயைந்த – ஒத்தன. வீக்கம் – மிகுதி.)

*இரவும் சந்திரிகையும் சேர்ந்தால் காதலர்கள் கூடிக் களிப்பதற்குக் கேட்பானேன்! இப்படி யெல்லாம் களியாட்ட மாடிக்கொண்டு போன சேனையும் மாதரும், தசரதனும் மற்றவரும், மிதிலைக்கு வந்து சேர்ந்தார்கள். மிதிலை மன்னனான சனகனும் தன்*

சேனை பரிவாரங்களுடன் எதிர்கொண்டு வந்து உபசரித்தான். தசரதனும் சனகனும் ஒருவரை யொருவர் தழுவிக் கொண்டார்கள். இராம, லக்குமணரும் தங்கள் தந்தையை அடைந்து வணங்கினார்கள். அவர்களைத் தசரதனும் ஆர்வத்தோடு ஆலிங்கனம் செய்தான். இருவரும் பின்னர் தாயாரைத் தொழுதார்கள். பரதனும் சத்துருக்கனனும் இராம, லக்குமணரைப் பணிந்தார்கள். இராமன் சேனையை நடத்த, எல்லோருமாக மிதிலை சென்று சேர்ந்தார்கள்.

## 16. இராமன் உலா வருதல்

*இராமன். இப்படி வீதியிலே உலா வருவதைப் பார்க்க, மாதர்கள் மாளிகைகளினின்றும் வெளியே ஓடி வந்தார்கள்.*

பஞ்சி சூழ் மெல்லடிப் பாவைமார் பண்ணை சூழ்,
மஞ்சு சூழ் நெடிய மாளிகையின் வந்து இடை விராய்
நஞ்சு சூழ் விழிகள் பூ மழையின் மேல் விழ நடந்து,
இஞ்சி சூழ் மிதிலை மா வீதி சென்று எய்தினான்.

(பஞ்சி – செம்பஞ்சுக் குழம்பு. பண்ணை – பெண்களின் கூட்டம். விராய் – கலந்து. மழையின் மேல் – மழையினும் அதிகமாக, இஞ்சி – மதில்.)

*மான் கூட்டமும், மயில் கூட்டமும் மின் கூட்டமும் போல, மாதர்கள் நெருக்கமாக வந்து தேனுண்ண மொய்க்கும் வண்டுகள் போல, இராமன் அழகைப் பருகுகின்றனர்.*

மான் இனம் வருவ போன்றும்,
        மயில் இனம் திரிவ போன்றும்,
மீன் இனம் மிளிர்வ போன்றும்
        மின் இனம் மிடைவ போன்றும்,
தேன் இனம் சிலம்பி ஆர்ப்ப,
        சிலம்பு இனம் புலம்ப, எங்கும்
பூநனை கூந்தல் மாதர்
        ‘பொம்’ எனப் புகுந்து மொய்த்தார்.

விரிந்து வீழ் கூந்தல் பாரார்,
மேகலை அற்ற நோக்கார்,
சரிந்த பூம் துகில்கள் தாங்கார்,
இடை தடுமாறத் தாழார்,
நெருங்கினர்; நெருங்கிப் புக்கு,
'நீங்குமின்! நீங்குமின்!' என்று,
அரும் கலம் அனைய மாதர்,
தேன் நுகர் அளியின் மொய்த்தார்.

(அரும் கலம் அனைய – அரிய ஆபரணங்களைப் போல் அழகு செய்யும். அளி – வண்டு.)

*மாதர்கள், தம்மை இராமன்பால் இழுத்துக் கொண்டு தமக்கு முன்னாக ஓடும் மனத்தை எட்டிப் பிடிக்க விரும்புபவர் போல, விரைவாக ஓடி வருகின்றார்கள்.*

பள்ளத்துப் பாயும் நல்நீர்
அனையவர், பானல் பூத்த
வெள்ளத்தும் பெரிய கண்ணார்,
மென் சிலம்பு அலம்ப, மென் பூ
தள்ள, தம் இடைகள் நோவ,
தமை வலித்து அவன்பால் செல்லும்
உள்ளத்தைப் 'பிடித்தும்' என்ன
ஓடுகின்றாரும் ஒத்தார்.

(பானல் – கருங்குவளை. வெள்ளம் – கடல். பூ – பூ போன்ற பாதம். வலித்து – இழுத்து.)

*இராமனது அவயவங்களில் ஒன்றைப் பார்த்தவர்கள் அந்த அவயவத்தின் அழகிலேயே மயங்கி நின்று*

*விடுகிறார்கள். அவர்கள் தாங்கள் பார்த்த அந்த அவயவத்திலிருந்து மற்ற அவயவங்களின் அழகை யெல்லாம் பார்க்கக் கொடுத்து வைக்காதவர்கள் ஆகின்றார்கள்.*

தோள் கண்டார் தோளே கண்டார்!
தொடு கழல் கமலம் அன்ன
தாள் கண்டார் தாளே காண்டார்!
தடக்கை கண்டாரும் அஃதே!
வாள் கொண்ட கண்ணார் யாரே
வடிவினை முடியக் கண்டார்?
ஊழ் கொண்ட சமயத்து அன்னான்
உருவு கண்டாரை ஒத்தார்.

(தொடு கழல் – காலில் கட்டிய வீரக் கண்டை. கொண்ட – நிகர்த்த. ஊழ் – முடிவு.)

*இப்படியே மாதர்களது உள்ளத்தையெல்லாம் கொள்ளை கொண்ட வீர புருஷனான இராமனும், அரசர் குழாம் புடை சூழத் தம்பியரோடும் சென்று, வசிட்டர் விசுவாமித்திரர் இருந்த மண்டபத்தைச் சேர்ந்தான். அங்கே தசரதன், சனகன் முதலியோரும் வந்து சேர்ந்தார்கள். சனகன், உயர்ந்தவர், தாழ்ந்தவர் என்ற வித்தியாசம் பாராட்டாமல், எல்லோருக்கும் உயர்ந்த சன்மானம் செய்தான்.*

## 17. சீதைக்கு அலங்காரம் செய்தல்

*தசரதன் தன் தேவியரோடு சிங்காதனத்தில் இருந்தபோது, வசிட்டர் சனகனை நோக்கிச் சீதையை அழைத்து வரும்படி சொன்னார். சனகனும் தன் அருகிலிருந்த மாதரை அனுப்பி, சீதையை அழைத்து வரச் சொன்னான். இம்மாதர் சென்று சேடியரிடம் சொல்ல, அவர்கள் சீதையை அலங்கரிக்க ஆரம்பித்தார் கள். இவர்கள் அணிவித்த அணியும் பணியும் சீதையின் உருவை மறைத்தனவே ஒழிய அவள் அழகை அதிகப் படுத்தவில்லை. அழகினுக்கு யாரே அழகு செய்ய முடியும்?*

அமிழ் இமைத் துணைகள் கண்ணுக்கு
அணி என அமைக்குமா போல்,
உமிழ் சுடர்க் கலன்கள் நங்கை
உருவினை மறைப்பது ஓரார்,
அமிழ்தினைச் சுவை செய்து அன்ன,
அழகினுக்கு அழகு செய்தார்:
இமிழ் திரைப் பரவை ஞாலம்
ஏழைமை உடைத்து, மாதோ!

(அமிழ் இமை – தாழ்கின்ற கண் மடல். துணை – இரண்டு. இமிழ் திரை – ஒலிக்கின்ற அலை. பரவை – கடல்.)

*இப்படிச் சீதைக்கு அணிகளை யெல்லாம் பூட்டிய பின், திருஷ்டி தோஷம் கழித்து, இரட்சாபந்தனம் செய்தார்.*

நெய்வளர் விளக்கம் ஆட்டி, நீரோடு பூவும் தூவி,
தெய்வமும் பராவி, வேத பாரகர்க்கு ஈந்து செம்பொன்,
ஐயவி நுதலில் சேர்த்தி, ஆய் நிற அயினி சுற்றி,
கைவளர் மயில் அனாளை வலம் செய்து காப்பும் இட்டார்.

(விளக்கம் ஆட்டி – தீபத்தைச் சுழற்றிக் காட்டி. பராவி – பிரார்த்தித்து. ஆய்நிற அயினி – சிவந்த ஆலத்தி நீர். ஐயவி – வெண் கடுகுப் பொடி.)

*சீதையைத் தாதியர் சபா மண்டபத்திற்கு அழைத்து வந்தார்கள். அவள் அழகைக் கண்குளிரக் கண்ட மாதவரான விசுவாமித்திரரும், 'இவ்வளவு அழகுடைய பெண்ணொருத்தியைப் பரிசாகப் பெறுவது என்றால், இராமன் இந்தப் பெரிய சிவதனுசை மட்டுமா ஒடிப்பான்! மகாமேரு பர்வதத்தைக் கூட முறித்து விடுவான்!' என்று நினைத்துக் களிக்கிறார்.*

அச்சு என நினைத்த முதல் அந்தணன் நினைத்தான்:
'பச்சை மலை ஒத்த படிவத்து அடல் இராமன்,
நச்சுடை வடிக்கண் மலர் நங்கை இவள் என்றால்,
இச்சிலை கிடக்க, மலை ஏழையும் இறானோ!'

(அச்சு என – பிற மாதர் அழகுக்கு எல்லாம் ஆதாரம் போன்ற. படிவம் – வடிவம். அடல் – வலி. நச்சு – விருப்பம். வடிக்கண் – மாவடுவை யொத்த கண்.)

*வில்லை ஒடித்துத் தன்னை மணக்க இருக்கும் வீரன் 'இளைய கோவோடும், பராவரும் முனியொடும் பதிவந் தெய்தியவன்' என்றே முன்பு தாதி சொன்னதைக் கேட்டுச் சந்தேகம் நீங்கியவளாயிருந்த சீதையும், இப்போது அச்சந்தேகம் முழுதும் நீங்கத் தன்*

---

× *'அந்தணன்' வசிட்டரைக் குறிப்பதாகச் சிலர் கூறுவர்.*

*கைவளையல்களைத் திருத்தும் பாவனையாக, தன் வளையல்களைப் பார்க்கிறவள் போலக் கடைக் கண்ணால் இராமனையும் பார்த்துக் கொண்டாள்.*

எய்ய வில் வளைத்ததும், இறுத்தலும் உரைத்து
மெய் விளைவு இடத்து, முதல் ஐயம் விடல் உற்றாள்
ஐயனை, அகத்து வடிவே அல, புறத்தும்,
கைவளை திருத்துபு கடைக்கணின் உணர்ந்தாள்.

(மெய் விளைவு இடத்து – இராமனது உருவம் சம்பந்தப்பட்ட அளவில். திருத்துபு – திருத்துகிற மாதிரி.)

*தான் முன்னர் கன்னிமாடத்துக் கண்டு காதலித்த தலைவனே இன்று தன்னை மணக்க இருக்கும் மணாளன் என்றறிந்து, பல கோடித் தேவர்கள் பங்கிட்டு உண்ட அமுதம் அத்தனையும், வேறு ஒருவருக்கும் பங்கிட்டுக் கொடுக்காமல் தான் ஒருத்தியாகவே உண்டு களித்தவள்போல, உடம்பு பூரித்துப் போய் விடுகிறாள் சீதை.*

கரும்கடை நெடும் கண் ஒளி யாறு, நிறைகண் அப்
பெரும் கடலின் மண்ட, உயிர் பெற்று இனிது உயிர்க்கும்
அரும் கலன் அணங்கு அரசி, ஆர் அமிழ்து அனைத்தும்
ஒருங்கு உடன் அருந்தினரை ஒத்து உடல் தடித்தாள்.

(ஒளியாறு – கண்ணாகிய ஆறு. நிறை கண் – நிரம்பிய கண்ணன்.)

*தசரதன் விசுவாமித்திரரை மணநாள் ஒன்று குறிக்கும்படி வேண்ட, அவரும், 'நாளைத்தினமே நல்ல தினம்' என்று நாள் குறித்துக் கொடுக்கிறார். மறுநாள் நடத்தப்போகும் மணவினையில் எல்லோரும் பங்கெடுத்துக் கொள்ள விரைகின்றார்.*

## 18. சீதா கல்யாணம்

*இராமனுக்கும் சீதைக்கும் அந்த ஒரு நாள் இரவு கழிவது ஒரு யுகம் கழிவது போலவே இருந்தது. பொழுது விடிந்ததும் பார்த்தால், மிதிலா நகரம், மாலைகளாலும், தோரணங்களாலும், கொடிகளாலும் அலங்கரிக்கப்பட்டு அமராவதிப் பட்டணம் போலவே காட்சியளித்தது.*

தோரணம் நடுவாரும், தூண் உறை பொதிவாரும்,
பூரண குடம் எங்கும் புனை துகில் புனைவாரும்,
கார் அணி நெடு மாடம் கதிர்மணி அணிவாரும்,
ஆரண மறைவாணர்க்கு இன் அமுது அடுவாரும்;

*ஆக, எங்கு பார்த்தாலும், எல்லோரும் நகரை அலங்கரிப்பதிலேயே முனைந்திருந்தார்கள். சீதா ராமரது மணத்தைக் காண வந்தவர்களின் தொகை கணக்கில் அடங்காது.*

தேர்மிசை வருவாரும், சிவிகையில் வருவாரும்,
ஊர்தியில் வருவாரும், ஒளி மணி நிரை ஓடைக்
கார்மிசை வருவாரும், கரிணியில் வருவாரும்,
பார்மிசை வருவாரும், பண்டியில் வருவாரும்.

(சிவிகை – பல்லக்கு. ஊர்தி – வாகனம். கார் – கரிய ஆண் யானை. கரிணி – பெண் யானை. பண்டி – வண்டி.)

*ஆக, மண மண்டபம் முழுவதும் ஆட்கள் பலவிடத்தும் இருந்து வந்து நிறைந்து விட்டார்கள். பொன்னாலும் மணியாலும் புனைந்த கல்யாண மண்டபத்திற்குத் தசரதன் தேவியரோடு வந்து, ஆசனத்தில் அமர்ந்திருந்தான். சனகனும், முனிவரும், அரசரும், தேவரும், மெல்லிய அன்ன நடையுடைய மாதரும் வந்து தங்களுக்குரிய ஆசனத்திருந்தார்கள். இராமனும் சீதையும் நன்றாய் அலங்கரிக்கப்பட்ட வர்களாய் வந்து மண மண்டபத்தைச் சேர்ந்தார்கள்.*

மன்றலின் வந்து, மணத் தவிசு ஏறி
வென்றி நெடுந்தகை வீரனும், ஆர்வத்து
இன்துணை அன்னமும் எய்தி இருந்தார்;
ஒன்றிய போகமும் யோகமும் ஒத்தார்.

(தவிசு – ஆசனம். ஒன்றிய – நெருங்கிய தொடர்புடைய. போகம் – பேரின்ப நிலை. யோகம் – யோக நிலைமை)

*விவாக வேள்வி செய்ய வேதியர் வந்து சூழ்ந்தனர். வசிட்டர் மங்கல அக்னியை வளர்த்தார். இராமனை யும் சீதையையும் மணவறையில் மணப்பலகையில் இருத்தி, சனகன் இராமன் எதிர் நின்று சீதையை அவனுக்குத் தாரை வார்த்துக் கொடுத்துக் கன்னிகா தானம் செய்தான்.*

அந்தணர் ஆசி, அரும் கலம் அன்னார்
தந்த பல்லாண்டு இசை, தார் முடி மன்னர்
வந்தனை, வானவர் வாழ்த்து ஒலி போல
முந்திய சங்கம் முழங்கின, மாதோ.

(அரும் கலம் அன்னார் – அருமையான ஆபரணம் போன்ற மாதர். முந்திய சங்கம் – சிறந்த சங்க வாத்தியம்.)

வானவர் பூ மழை, மன்னவர் பொன் பூ,
ஏனையர் தூவும் இலங்கு ஒளி முத்தம்,
தான் நகு நாள் மலர், என்று இவை தம்மால்
மீன் நகு வானின் விளங்கியது இப் பார்.

(இலங்கு – பிரகாசிக்கும். தான் நகு நாள் மலர் – தானாக மலர்ந்த பூக்கள். மீன் நகு – நக்ஷத்திரங்களால் விளங்குகின்ற)

*இராமன் மங்கல வேள்வித் தீயில் மந்திரம் ஓதி ஆகுதி பெற்று, தையல் தளிர்க் கையைப் பிடித்துக் கொண்டு, அந்த மங்கலத் தீயை வலம் வந்தான். அம்மி மிதித்து அருந்ததி பார்க்கும் கிரியையும் நிகழ்ந்தது. இவ்வாறு மணம் முடிக்கப்பெற்ற தம்பதிகள் இருவரும் முனி வரையும், தசரதனையும், தாயர் மூவரையும் வணங்கி னார்கள்.*

ஆர்த்தன பேரிகள்! ஆர்த்தன சங்கம்!
ஆர்த்தன நான்மறை! ஆர்த்தனர் வானோர்!
ஆர்த்தன பல் கலை! ஆர்த்தன பல்லாண்டு!
ஆர்த்தன வண்டினம்! ஆர்த்தன வேலை!

(வேலை – கடல். ஆர்த்தன – ஆரவாரம் செய்தன.)

*சனகன், தனது தம்பி குசத்துவனது குமாரிகள் மூவரையும், முறையே இராமனுக்கு இளையவர் மூவருக்கும் மணம் செய்து கொடுக்க, வசிட்டர், சீதா ராமருக்குச் செய்தது போலவே, அம்மூன்று தம்பதி களுக்கும் மண வினை முடிப்பித்தார்.*



*அமரர். கலைமணி. தொ. மு. பாஸ்கரத் தொண்டைமான் தமிழ் கூறும் நல்லுலகுக்கு நன்கு அறிமுகமானவர். அவரது தமிழ்ப்பணியும் கலைப்பணியும் தமிழக வரலாற்றில் புகழ் அத்தியாயங்கள் என்று ஓர் அன்பர் சொன்னார். முற்றிலும் உண்மை.*

*தஞ்சாவூரில் அவர் உருவாக்கிய கலைக்கூடமும், தமிழ் மக்களுக்கு அவர் விட்டுச் சென்றிருக்கும் நூல்களுமே அதற்குச் சான்றுகளாகும்.*

*குற்றாலமுனிவர்.ரசிகமணி டி.கே.சி.யின் பிரதம சீடரான அவர் ஆக்கித் தந்துள்ள இலக்கியப்படைப்புகளும் கலைப்படைப்புகளும் தமிழுக்கும் கலையுலகுக்கும் கிடைத்த அரிய பொக்கிஷங்கள்.*

## ஆசிரியரது பிற நூல்கள்

1. வேங்கடம் முதல் குமரி வரை (ஐந்து பாகங்கள்)
2. வேங்கடத்துக்கு அப்பால்
3. இந்தியக் கலைச் செல்வம் (வானொலிக் கட்டுரைகள்)
4. கலைஞன் கண்ட கடவுள்
5. கல்லும் சொல்லாதோ கவி
6. அமர காதலர்
7. தென்றல் தந்த கவிதை
8. தென்னாட்டுக் கோயில்களும், தமிழர் பண்பாடும்
9. பிள்ளையார்பட்டிப் பிள்ளையார்
10. தமிழறிஞர் வெள்ளகால் சுப்பிரமணிய முதலியார்
11. ரசிகமணி டி.கே.சி.
12. மதுரை மீனாட்சி
13. இந்திய கலைச் செல்வம்

